உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவேட்டீச்வரன் பேட்டை

ஸ்ரீ நடராஜ குஞ்சிதபாத

# பக்தஜன சபை.

———:(0):———

அனைவர்களுக்கும் ஓர் வேண்டுகோள்.

சிவநேயச் செல்வர்களே! அறிவிற் சிறந்த அன்பர்களே!!

என் அருமைச் சினேகிதர்களே!!!

தஞ்சை ஜில்லா, ராஜமன்னார்குடி தாலுக்கா பாமணியென்று வழங்கும் திருப்பாதாளீச்சுரம் கணேச குருக்கள் குமாரரும், தற்காலம் சென்னை திருவேட்டீச்சுரன் பேட்டையில் வசித்துக் கொண்டு சிலகாலம் ஷை திருவேட்டீச்சுரர் தேவஸ்தானத்தில் பூஜை செய்து வந்தவருமான பிரம்மஸ்ரீ ம. க. சுப்பாராய குருக்களாகிய நான் தெரிவித்து கொள்ளுவது யாதெனில், ஷை திருவேட்டீச்சுரம் பேட்டை நாகப்பய்யர் தெருவு 40 நெ. வீட்டிலிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ C. ஆதிகேசவுலு நாயுடு அவர்கள் சில வருஷங்களுக்கு முன் ஷை பேட்டை ஸ்ரீ திருவேட்டீச்சுரர் தேவஸ்தானத்தில் நடந்துவரும் பிரம்மோற்சவத்தில் பத்தாவது நாள் ஸ்ரீ நடராஜமூர்த்திக்கு நடக்கும் அனுக்கிரக உற்சவத்தைப் பல அன்பர்களின் உதவியைக் கொண்டு நடத்தி வந்தார். அவ்வுற்சவத்தை ஸ்ரீநடராஜ அன்பர்களான ம-ா-ா-ஸ்ரீ கோவிந்தாசாரியர் (1) ஷையார் தம்பி நடராஜாசாரிய[ர்] (2) இவர்கள் வெகு விமரிசையாக நடத்த முன்வந்தனர். ஆகை[யா]ல் ஷைதேவஸ்தானத்தில் வேறு உற

சவம் ஏதேனும் ஸ்ரீ தாண்டவ மூர்த்திக்குச் செய்யவேண்டுமெனக் கருதி என்னுடன் ஆலோசித்தார் - நானும் அவ்விஷயத்தில் ஈடு பட்டு அவ்வருஷமே (அதாவது சித்தார்த்திரி ஞு) ஷை ஆனியுத்திர ஆநந்த தாண்வ உற்சவத்தைப் பல அன்பர்களின் திரவிய சகாயத் தால் வெகு விமரிசையாக்நடத்தி வருஷா வருஷமும் ஷை உற்ச வத்தைச் செவ்வனே நடத்தும் வண்ணம் ஸ்ரீநடராஜ குஞ்சிதபாத பக்தஜனசபை யென்னும் திருப்பெயர் பூண்டு பரமேஸ்வரன் திரு வருளாலும், மற்றுமுள்ள சிவனேசச் செல்வர்களாலும் ஸ்தாபிக்கப் பட்டது.

நோக்கம் (1) சென்னை திருவேட்டீச்சுரம் பேட்டை, ஸ்ரீதிருவேட் டீச்வர ஸ்வாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ சிவகாமி சுந்தரி ஸமேத ஸ்ரீ நடராஜ மூர்த்திக்கு வருஷா வருஷம் ஆனி யுத்தரத்தன்று ஆநந்த தாண்டவ உற்சவத்தை மகாபி ஷேகத்துடன் விமரிசையாய் நடத்துதல்.

(2) ஷைதேவஸ்தானத்தில் ஸ்ரீ ஆறுமுக ஸ்வாமிக்கு நடக் கும் கந்தஷஷ்டி யுற்சவத்தில் ஒன்பதாவது நாள் நடக் கும்அஷ்டோத்தர மகா சங்காபிஷேகத்தை நடத்துதல்.

மெம்பர்கள். இச்சபையில் ஸ்திரீகளுள்பட யாவரும் மெம்பரா கச் சேரலாம். ஒவ்வொரு மெம்பரும் பிரதிமாதமும் எட்டணவுக்குக் குறையாமல் சந்தா செலுத்துதல் வேண்டும்.

ரூபாய் ஐம்பது ஒருமுறையாய்ச் சபைக்குச் செலுத் துபவர் நிரந்தர மெம்பர்களாவர்.

நிர்வாக சபை. இச்சபையின் காரியங்கள் நடைபெறுவதற்குக் கீழ் குறித்த வண்ணம் நிருவாக சபையிருத்தல்வேண்டு ம் (1) அக்கிராசனதிபதி (2)உப அக்கிராசனதிபதி (3) காரியதரிசிகள். (4) டைரெக்டர்கள். (5) கணி தபரிசோதகர். இந்நிர்வாக சபையின் சங்கியை பதி னென்று - இச்சபையில் காளயுக்தி வருஷத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட நிர்வாக சபை மெம்பர்க ளின் பெயர்களாவன:—

ஆக்கிராசனாதிபதி:-ம-ா-ா-ஸ்ரீ டாக்டர் பாங் சி. சுந்தரேசய்யரவர்கள்.
உபஅக்கிராசனாதிபதி:—ம-ா-ா-ஸ்ரீ ராமஸ்வாமி அய்யங்காரவர்கள்.
டைரக்டர்கள்:—

ம-ா-ா-ஸ்ரீ ம. க. சுப்பராய குருக்களவர்கள்:
,, கமான் தெரு முனுசாமி முதலியரவர்கள்.
,, தி. பச்சையப்பாச்சாரியாரவர்கள்
,, கு. கதிர்வேலு முதலியாரவர்கள்.
,, ஆ. வெ. ராஜரத்தின முதலியாரவர்கள்.
,, அ. மாணிக்க முதலியாரவர்கள்.

ஜாயிண்டு காரியதரிசிகள்:—

ம-ா-ா-ஸ்ரீ ஆதிகேசவலு நாயுடு அவகள்.
,, திருவேங்கட முதலியாரவர்கள்.

கணித பரிசோதகர் :—ம-ா-ா-ஸ்ரீ ராமமூர்த்தி அய்யரவர்கள்.

## மேற்படி சபையின் சட்டங்கள் முதலியன.

* சபையின் காரியதரிசிகள் யெவ்வித விஷயங்களையும் தலைவர்களை கலந்து செய்யவும்.

1. ஒவ்வொரு மெம்பரும் மாத மாதம் சந்தாவைத் தடையின்றிச் செலுத்தி ரசீது பெற்றுக்கொள்ளல் வேண்டும். எந்த மெம்பராவது 6 மாதகாலம் சந்தா செலுத்தா திருந்தால் அவர்களின் பெயரை மெம்பர் லிஸ்டிலிருந்து எடுத்துவிடப்படும்.

2. மாதாமாதம் வசூலாகும் பணத்தை சபையின்தீர்மானப்படி ஸேவிங்ஸ்பாங்கியில் கட்டிவைத்தல்வேண்டும். ஸேவிங்ஸபாங்க் புஸ்தகம் ஜாயிண்டு காரியதரிசிகளிடம் இருத்தல்வேண்டும்.

3. ஸேவிங்ஸ் பாங்கியில் 20ரூபாய்க்குமேற்பட்ட தொகையிருக்குமானுல் நிர்வாக சபையின் தீர்மானப்படி தக்கபொறுப்பின்பேரில் வட்டிக்குக் கொடுக்கலாம். பாண்டின்பேரில் கொடுத்தலகூடாது.

4. ஒவ்வொரு மெம்பரும் தன்னுலியன்றளவு ஷை சபைக்குச் சாஸ்வத பண்டைச் சேகரிக்கப் பிரயத்தனம் செய்தல் வேண்டும்.

5. மேற்படி சபையாரால் நடத்தப்படும் உற்சவாதிகளை ஒவ்வொருமெம்பரும் சிரத்தையோடுஒத்துழைத்து நடத்தல்வேண்டும்.

6. உற்சவத்தில் மீந்த சாமான்களைப் பகிரங்கமாய் ஏலம் போட்டு அதின் வரவைச் சபையின் பண்டில் சேர்த்தல் வேண்டும்.

7. ஒவ்வொரு வருடமும், உற்சவத்தையும் அபிஷேகத்தை யும் சிறப்பாகவே நடத்துதல் அவசியம்.

8. இச்சபைக்காகத் தற்காலம் ஏற்பாடு செய்திருக்கிற உண்டி பணத்தில் ஸ்ரீ சண்பகவல்லியம்மன் வெள்ளி பிரபை முதலியவை பூர்த்தி செய்தல் வேண்டும்.

9. பிரதி வருடமும் சித்திரை மாதத்தில் மேற்படி சபையின் மகாசபை கூடி முன் வருடத்திய வரவு செலவு கணக்கைப் பரிசீ லனை செய்து அவ்வருஷத்தில் நடத்தவேண்டிய உற்சவ அபிஷே கங்களின் திட்டம் ஒருவாறு ஏற்படுத்தி வெளியிடுதல் வேண்டும்.

அன்பிற் சிறந்த அறிஞர்களே! கனதனவான்களே!!

மேற்படி சபையின் நோக்கங்கள் இனிது முடிதற் பொருட் டும் அதற்கோர் சாஸ்வதமான நிதி ஏற்படுத்துதற்பொருட்டும் இச் சபையின் மூலமாய் வரும் உண்டியில் தங்களாலியன்ற வளவு ஒரு தம்பிடியாகிலும் சிவார்ப்பணமாய்க் கொடுப்பீர்களாக, "பல துளி பெருவெள்ளம்" என்னும் பழமொழிப்படி ஷை சபையை ஸ்தாபித்த பெரும் புண்ணியம் அவரவர்களுக்கும் ஏற்படும்.

இச்சபையின் சாஸ்வத நிதியைச் சேகரிப்பதற்குப் பல சிவ நேசச் செல்வர்களாகிய வியாபாரிகளிட மிருந்து உண்டி வசூல் செய்விக்கலா மென்றும் ஷை புண்ணியத்தையும் அடைய வேண்டு மென அபிப்பிராயம் கொடுத்த ம-ா-ா-ஸ்ரீ, கு. கதிர்வேலு முதலி யார் அவர்களுக்கும் ம-ா-ா-ஸ்ரீ, ஆ. வே. இராஜரத்தின முதலியா ருக்கும் ம-ா-ா-ஸ்ரீ, தி. பச்சையப்பாச்சாரியவர்களுக்கும் இச்சபை யார் நன்றியறித லுள்ளவர்களா யிருக்கிறார்கள்.

இச்சபையின் மூலதனத்துக்காக இதன் மெம்பர்களாகிய

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ம-ா-ா-ஸ்ரீ. | தி. பச்சையப்பாச்சாரியரவர்கள் | ரூ. | 100 | 0 | 0 |
| ,, | அ. மாணிக்க முதலியாரவர்கள் | | 100 | 0 | 0 |
| ,, | ஆ. புருஷோத்தம பத்தடுகாரு | | 50 | 0 | 0 |
| ,, | சி. ஆதிகேசவுலு நாயுடுகாரு | | 50 | 0 | 0 |

கையொப்பம் செய்ததற்கு இச்சபையார் மிக்க நன்றி பாராட்டுத லோடு தாங்கள் செய்ததுபோலவே மற்றவர்களையும் இவ் புண்ணி யத்தில் ஈடுபடும்படி செய்விக்க வேண்டுமென்று பிரார்த்திக்கின்ற னர்.

இச்சபையின் முன்னேற்றத்துக்காக மேற்படி சபையின் வேண்டுகோளுக் கிரங்கி **ஸ்ரீ நடராஜ தத்துவ** மென்னும் ஓர் நூலை யியற்றிய பிரம்மஸ்ரீ ந. சுப்பிரமண்ய அய்யர் அவர்க ளுக்கு எனது மனமார்ந்த வந்தனத்தை அளிப்பதுடன் அவரை மேற்படி சபையில் கௌரவ நிரந்தர மெம்பராகச் சேர்த்தல் வேண்டுமென்னும் பிரேரணையுடன் எல்லாம் வல்ல ஸ்ரீ நடராஜப் பெருமானைச் சந்ததம் பணிகின்றேன்.

வாழிதிரு வேட்டநகர் வாழிநட ராஜவிறை
வாழிகுஞ் சிதபாத மன்னுசபை யோரெல்லாம்
வாழிமுத் தமிழ்மொழி வாழிமெய்த் தொண்டர்கள்
வாழியிவ் வுலகெலாம் மழைவளம் பெருகியே,

சிவம்.

இங்ஙனம்,

ம. க. சுப்பராய குருக்கள்.

# குறிப்பு

சிவநேயச் செல்வர்களும் தர்ம சீலர்களும கவனித்து அறிய வேண்டிய விஷயமாவது:—

ஸ்ரீ சிற்சக்தி விசிஷ்ட சதாநந்த ஸ்வரூப ஸ்ரீ ஆநந்த தாண்டவ மூர்த்திக்கு அர்ப்பணமாய் கீழ்க்கண்ட திரவியங் களை வாங்கித் தருபவர் இன்னபலன்களை யடைவா ரென் பது:—சாஸ்திரவிதி.

| திரவியம். | பலன். |
|---|---|
| தயிலாதிகள் | பக்தி |
| சூர்ணாதிகள் | சம்பத்து |
| பழவகைகள் | ஸர்வஜனவசீகாரம் |
| பஞ்சாமிருதம் | தீர்க்காயுள் |
| பால் | சாந்தகுணம் |
| தயிர் | திடகாத்திரம் |
| தேன் | சங்கீத வன்மை |
| நெய் | போகம் |
| கரும்பு சர்க்கரை | சாஸ்திரத்தேர்ச்சி |
| இளநீர் | சற்புத்திரப்பேறு |
| விபூதி | ஞானம் |
| சந்தனம் | ஸ்வர்க்கபோகம் |
| பஞ்சகவ்வியம் | பாவநிவர்த்தி |
| ஸ்வர்ணம் | வைராக்கியம் |
| ஸ்தபனம் | அசுவமேதயாக பலன் |
| பன்னீர் | புகழ் |
| வஸ்திரம் | சமபாவனை |
| புஷ்பம் | சந்தோஷம் |
| கற்பூரம் | அத்வைதமுத்தி |

## வாழ்த்து

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதேல் லாமர னுமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

உ

சிவமயம்.

1922ம்-ஞூ ஜூன்மீ 30உ ஆனித்திருமஞ்சன உற்சவம்.

# நடராஜ குஞ்சிதபாத பக்தஜன சபையார்.

---

மேம்பர்கள் வரவு விவரம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| ம-ள-ஸ்ரீ கன்னையா | 25 | 0 |
| கமான்தெரு முனுசாமி முதலியார் | 16 | 0 |
| தீ. பச்சையப்பாச்சாரி | 10 | 0 |
| ஆயில். ராஜரத்தின முதலியார் | 10 | 0 |
| அ. மாணிக்க பிள்ளை | 10 | 0 |
| சுந்தரேச அய்யர் | 7 | 0 |
| ராமமூர்த்தி அய்யர் | 6 | 0 |
| ராமஸ்வாமி அய்யங்கார் | 6 | 0 |
| சாமிநாத அய்யர் | 6 | 0 |
| கதிர்வேலு முதலியார் | 6 | 0 |
| திருவேங்கட முதலியார் | 6 | 0 |
| வெ. ரெங்கசாமி நாயகர் | 6 | 0 |
| ஹனுமான் சிங்கு | 6 | 0 |
| மோகன் சிங்கு | 6 | 0 |
| அநந்த கிருஷ்ண அய்யர் | 6 | 0 |
| சாமிநாத குருக்கள் | 6 | 0 |
| பாலாஜிலால் | 6 | 0 |
| முருகேச நாயகர் | 6 | 0 |
| தர்மலிங்க முதலியார் | 6 | 0 |
| மு. சம்மந்த முதலியார் | 6 | 0 |
| ஆதிகேசவலு நாயடு | 6 | 0 |
| சுப்பராய குருக்கள் | 6 | 0 |
| தி. முனுசாமி அய்யர் | 6 | 0 |
| பொன்னுசாமி முதலியார் | 6 | 0 |
| ராமலிங்க அய்யர் | 5 | 0 |
| குப்புசாமி அய்யர் | 5 | 0 |
| மாணிக்க முதலியார் | 5 | 0 |
| பாலசுந்தரம் | 4 | 0 |
| சே. ராஜரத்தின பிள்ளை | 3 | 0 |
| சங்கர அய்யர் | 2 | 0 |
| ம. கோவிந்தசாமி செட்டியார் | 2 | 0 |
| பங்காருசாமி ஆசாரி | 2 | 0 |
| ரா. ஜீவரத்தின முதலியார் | 1 | 0 |
| குப்பாஜி ராவ் | 1 | 0 |
| மோகனசுந்தர முதலியர் | 1 | 0 |
| செங்கல் ராவ் | 1 | 0 |
| ராமையர் | 1 | 0 |
| மொத்தம் வரவுரூபாய் | 219 | 0 |

## 1922-ம் ௵ ஜூன் ௴ 30-உ செலவு விவரம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| மஞ்சள் பலம் 5 ... ... | 0 | 2 |
| குங்குமம் பலம் 7½ ... ... | 0 | 5 |
| சந்தனக்கட்டை வீசை 1½ ... ... | 4 | 8 |
| பச்சைக் கர்ப்பூரம் தோலா 2 ... ... | 2 | 0 |
| குங்குமப்பூ தோலா 1 ... ... | 2 | 0 |
| சந்தன அத்தர் புட்டி 1 ... ... | 1 | 8 |
| புனுகு ... ... | 2 | 0 |
| கர்ப்பூரம் பலம் 3 ... ... | 1 | 2 |
| சாம்பராணி பலம் 2½ ... ... | 0 | 4 |
| ஷை வத்தி பலம் 1 ... ... | 0 | 10 |
| சாந்து வீசை 1 ... ... | 1 | 8 |
| சாம்பராணி தயிலம் 2½ பலம் ... ... | 1 | 4 |
| ரஸ்த்தாளி வாழைப்பழம் 700 ... ... | 8 | 12 |
| வேத பாராயணம் ... ... | 1 | 0 |
| தேவார பாராயணம் ... ... | 2 | 0 |
| புஷ்பம் ... ... | 30 | 0 |
| மல்லங்க வஸ்திரம் 7 கஜம் ... ... | 5 | 0 |
| பச்சை சில்க் கஜம் 1-க்கு ... ... | 2 | 0 |
| ஸ்வர்ணாபிஷேகம் ... ... | 0 | 8 |
| தேங்கா பிரிகயர் 1 வீசை ... ... | 0 | 12 |
| சணல் பிரிகயர் வீசை 1-க்கு ... ... | 0 | 10 |
| மூங்கில் பத்தை 2-க்கு ... ... | 0 | 6 |
| தொன்னைகட்டு 3-க்கு ... ... | 1 | 2 |
| தீவட்டி எண்ணை வீசை 2 ... ... | 2 | 0 |
| வாழைமரம் இளநீர் வண்டிசத்தம்... ... | 1 | 8 |
| சந் னம் வீசை 12க்கு அரை கூலி ... | 5 | 0 |
| பந்தல் வீராசாமி ... ... | 13 | 0 |
| மத்தாப்பு 150 ... ... | 4 | 8 |

| | | |
|---|---|---|
| வெடிமருந்து வீசை 2-க்கு | 3 | 0 |
| சாதா புருஸ் 10-க்கு | 1 | 0 |
| கலர் புருஸ் 8-க்கு | 1 | 0 |
| நல்தா 50-க்கு | 3 | 0 |
| மேற்படி எடுகூலி | 0 | 2 |
| வெத்திலே கவளி 3 | 0 | 7½ |
| பாக்கு பலம் 7½ | 0 | 6 |
| ஸ்தபன அரிசி படி 1 | 0 | 5 |
| ,, குட்டை 1 | 0 | 8 |
| முப்புரிநூல் பலம் 2 | 0 | 3 |
| கூடை 1 | 0 | 3 |
| ஓலேப்பாய் 1 | 0 | 3 |
| பால் படி 4 | 2 | 0 |
| தயிர் படி 2 | 1 | 0 |
| வாழ இலே | 0 | 1 |
| பாதக் காணிக்லக | 0 | 8 |
| குருக்கள் விசேஷம் | 1 | 8 |
| சுயம் பரிச்சாகரன் | 1 | 0 |
| அமிஞ | 0 | 8 |
| கணக்கு | 0 | 4 |
| வெளக்ளாண்டி | 1 | 0 |
| பால்காவடி | 0 | 2 |
| திரு வலகு | 0 | 4 |
| கோவில் வாத்தியம் | 1 | 0 |
| மத்தாப்பு கோல் 1-க்கு | 0 | 5 |
| வெடிபோட கூலி | 0 | 8 |
| சக்கரதிவட்டி 4-க்கு கர்தை | 0 | 8 |
| மேற்படி பிடிகூலி | 0 | 8 |
| எண்ணே சட்டி | 0 | 4 |
| காஸ்லேட் 2-க்கு | 2 | 0 |
| அபிஷேக திரவியம் இடி கூலி | 0 | 6 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஸ்வாமி ஆள் 16-க்கு | ... | ... | 6 | 0 |
| அம்மன் ஆள் 8-க்கு | ... | ... | 3 | 0 |
| மாணிக்க ஸ்வாமி ஆள் 4-க்கு | ... | ... | 1 | 8 |
| ஆள் மேஸ்திரி துணி | ... | ... | 1 | 8 |
| பெரியகுடை 2-க்கு | ... | ... | 2 | 8 |
| சின்னகுடை 2-க்கு | ... | ... | 1 | 4 |
| நோட்டீஸ் 700-க்கு | ... | ... | 4 | 0 |
| யானைக்கு பாஸ் சிலவு | ... | ... | 0 | 8 |
| யானைக்காரன் சிலவு | ... | ... | 2 | 0 |
| பந்தோபஸ்து சிலவு | ... | ... | 0 | 12 |
| வாத்தியம் கன்னையா | ... | ... | 20 | 0 |
| ஷை இனும் | ... | ... | 2 | 0 |
| அதிக டவுல் | ... | ... | 5 | 0 |
| வெளியிலிருந்து சாமான் கொண்டுவர எடுகூலி... | | | 2 | 0 |
| வரவு செலவு அச்சிட்ட காயிதரீம் ½-க்கு | | ... | 3 | 0 |
| பிரசாதம் சக்கரை பொங்கல் 1படி... | | ... | 3 | 0 |
| புளியோரை 2படி | ... | ... | 2 | 8 |
| வடை ½படி | ... | ... | 0 | 12 |
| கடலை 6படி | ... | ... | 3 | 0 |
| தளிகை கூடை 4க்கு | ... | ... | 0 | 6 |
| அதிக பரிசாரகன் | ... | ... | 1 | 0 |
| வெளியில் பிரசாதம் கொடுக்க வண்டி சத்தம் | | ... | 3 | 0 |
| தீவட்டி மேஸ்திரி துனி | ... | ... | 1 | 0 |
| செலவு ஆக மொத்தம் | | | 189 6 | 6 |

மிச்ச ரூபாய் 29—9—6 அம்மனுக்கு வெள்ளிக் கவசம் சமர்ப்பிக்க செலவு செய்யப்பட்டது.

## வேளி சாமான் வரவு

ம-ா-ா ஸ்ரீ, மருந்துகடை மாணிக்கப்பா அபிஷேக சாமான் விவரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| வெட்டிவேர் | ... | ... | பலம் | 5 |
| கஸ்தூரி மஞ்சள் | ... | ... | ,, | 10 |
| நெல்லி விரை | ... | ... | ,, | 10 |
| திரவியப் பட்டை | ... | ... | ,, | 10 |
| பச்சை இலை | ... | ... | ,, | 5 |
| கிச்சிலிக் கிழங்கு | ... | ... | ,, | 5 |
| கோரைக் கிழங்கு | ... | ... | ,, | 5 |
| பூலாங் கிழங்கு | ... | ... | ,, | 5 |
| சண்பக மொக்கு | ... | ... | ,, | 5 |
| ரோஜா மொக்கு | ... | ... | ,, | 5 |
| ஏலக்காய் | ... | ... | ,, | 2½ |

| | |
|---|---|
| ம-ா-ா ஸ்ரீ, டாடா பாங்கி சுந்தரேசய்யர் மலைப்பழம் | 1000 |
| ,, போஸ்டாபீஸ் சுந்தரேசய்யர் பிலாப்பழம் | 2 |
| ,, மண்டி தாண்டராய நாயக்கர் மாம்பழம்... | 100 |
| ,, மண்டி இரத்தின செட்டியார் ஷை ... | 100 |
| ,, தேங்காய்கடை கந்தசாமி ஸ்ரீ ஷை ... | 25 |
| ,, இராமசுவாமி அய்யர் நாட்டு சக்கரை வீசை | 13 |
| ,, துல்ஜன் ராவ் ஷை வீசை ... ... | 8 |
| ,, மளிகை வேலு நாயகர் வீசை ... | 2 |
| ,, ராயபேட்டை கிஷ்டாராவ் தேன் வீசை ... | 8 |
| ,, புதூர் விட்டல் ராவ் ஷை ... ... | 5 |
| ,, ஷராப்பு ராஜு செட்டி ஷை ... | 2 |
| ,, ஆ. மா. ஜகன்னாத ஸ்ரீ ஷை ... | 2 |
| ,, ரங்கூன் முத்துசாமி ஸ்ரீயார் பேரீச்சம்பழம் வீசை | 4 |
| ,, மூர்மார்கெட் சபாபதி செட்டி ஷை ... | 2 |
| ,, மோகாம்பரப்பா திராக்ஷி வீசை ... | ½ |
| ,, கோ. எல்லப்ப செட்டியார் சாமான் விபரம் திராக்ஷி வீசை | ½ |

| | | | |
|---|---|---|---|
| முந்திரி பருப்பு வீசை | | | 1 |
| சாரைப்பருப்பு பலம் | | | 10 |
| கற்கண்டு வீசை | | | ½ |
| ஏலக்காய் பலம் | | | 2½ |
| ம-ா-ா-ஸ்ரீ சிக்கண்ணப்பா சந்தனக்கட்டை | வீசை | ... | ½ |
| ,, துளசிங்கு செட்டியார் | வீசை | ... | ½ |
| ,, மருந்துகடை உமாபதி ஷ | வீசை | ... | ½ |

## விபூதி.

| | | | |
|---|---|---|---|
| ம-ா-ா-ஸ்ரீ, சேப்பாக்கம் இரத்தின ஷ விபூதி | படி | | 12 |
| ,, திருவேங்கட ஷ | ,, | ... | 4 |
| ,, பாலு பாகவதர் | ,, | ... | 4 |

## பன்னீர்.

| | | | |
|---|---|---|---|
| ,, உமாபதி முதலியார் பன்னீர் புட்டி பெரிசு | | ... | 1 |
| ,, ஓவர்ஸீயர் ராமய்யர் | ,, | ... | 3 |
| ,, ராஜரத்தின ஷ | ,, | ... | 1 |
| ,, பண்டிட் சாமிநாதய்யர் சிறிசு | ,, | ... | 4 |
| ,, பரமசிவம் பிள்ளை | ,, | ... | 1 |
| ,, பார்த்தசாரதி அய்யங்கார் | ,, | ... | 1 |
| ,, சராப்பு கந்தஸாமி செட்டி | ஷை | ... | 1 |
| ,, சராப்பு நடேச செட்டி | ,, | ... | 1 |
| ,, ஸானட்ரீ குப்புஸாமி அய்யர் | ,, | ... | 2 |
| ,, குசப்பேட்டை கனகசபை உடையார் | ,, | ... | 2 |
| ,, வரதப்ப உடையார் | ,, | ... | 2 |
| ,, பொன்னுஸாமி உடையார் | ,, | ... | 2 |
| ,, கொத்தா கிருஷ்ணஸாமி செட்டியார் | ,, | ... | 1 |
| ,, ரங்கநாத செட்டியார் | ,, | ... | 1 |
| . மண்டி பொன்னுஸாமி நாய்க்கர் | ,, | ... | 1 |
| ,, மண்டி மாசிலாமணி ஷ | ,, | ... | 1 |
| ,, மண்டி தங்கவேல் நாட்டார் | ,, | ... | 1 |

| | | | | |
|---|---|---|---|---|
| ம-ா-ா-ஸ்ரீ | சராப்பு சொக்கலிங்க செட்டி | ,, | ... | 1 |
| ,, | சுந்தர நாய்க்கர் | ,, | ... | 1 |
| ,, | சகலா சுப்பராய செட்டி | ,, | ... | 2 |
| ,, | மருந்துகடை சங்கர ஷ் | ,, | ... | 1 |
| ,, | செக்குமேடு வேல்முருக நாய்க்கர் | ,, | ... | 1 |
| ,, | கோவிந்தாச்சாரியார் | ,, | ... | 1 |
| ,, | ராஜாபாதர் முதலியார் | ,, | ... | 2 |
| ,, | மருந்துகடை ராஜமாணிக்க முதலியார் | ,, | ... | 1 |

## கற்பூரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ,, | மளிகை குப்பு செட்டி பலம் | | ... | 5 |
| ,, | வ. ஆறுமுக நாய்க்கர் | ,, | ... | 5 |
| ,, | கோவிந்தாச்சாரியார் | ,, | ... | 2½ |
| ,, | ராஜாபாதர் ஷ் | ,, | ... | 2½ |
| ,, | தச்சபேஸ்வரய்யர் | ,, | ... | 2½ |
| ,, | மருந்துகடை நடேச முதலியார் | ,, | ... | 2½ |

## தேங்காய்.

| | | | | |
|---|---|---|---|---|
| ,, | தேங்காய்கடை மாணிக்க செட்டி | | ... | 10 |
| ,, | முருகப்ப செட்டி | ,, | ... | 10 |
| ,, | தியாகராஜ செட்டியார் | ,, | ... | 10 |
| ,, | கந்தசாமி முதலியார் | ,, | ... | 10 |

## பால்.

| | | | | |
|---|---|---|---|---|
| ம-ா-ா-ஸ்ரீ, | திருவல்லிக்கேணி பாத்திர வியாபாரிகள் பால் படி | | | 14 |
| ,, | கே. ஸாமிநாதய்யர் | ,, | ... | 4 |
| ,, | ராமஸ்வாமி அய்யர் | ,, | ... | 4 |
| ,, | ஜீவன் ராவ் | ,, | ... | 4 |
| ,, | எல். சங்கரய்யர் | ,, | ... | 4 |
| ,, | ஸுபரிண்டெண்டு வியாக்ரபுரி அய்யர் | ,, | ... | 4 |
| ,, | சிவராமன் தெரு, சிங்கார செட்டியார் மார்க்காராய செட்டியார் | ,, | ... | 4 |

| | | | |
|---|---|---|---|
| ம-ா-ா.-ஸ்ரீ | செக்குமேடு தாயாரம்மாள் ,, | ... | 4 |
| ,, | ராஜமாணிக்க கிராமணி ,, | ... | 2 |
| ,, | பெரியவாணியத் தெரு அம்மாயிஅம்மாள் | ... | 2 |
| ,, | செல்லபிள்ளையார் தெரு கந்தசாமி ழ் ,, | ... | 2 |
| ,, | பொன்னம்பல ழ் ,, | ... | 2 |
| ,, | ரங்கய்ய நாயுடு ,, | ... | 2 |
| ,, | வாசுதேவராவ் ,, | ... | 2 |
| ,, | நாகப்பய்யர் தெரு வெங்கட்டராமய்யர் ,, | ... | 2 |
| ,, | சேப்பாக் சுப்பண்ணாச்சாரி ,, | ... | 2 |
| ,, | மேற்படி தியாகராஜாச்சாரி ,, | ... | 2 |
| ,, | மடம் நாராயணசாமி அய்யர் ,, | ... | 2 |
| ,, | சன்னிதி தெரு ஜோஷியம் சுப்பிரமணிய அய்யர் | | 2 |
| ,, | வெங்கட்ராமய்யர் ,, | ... | 1 |
| ,, | சேப்பாக்கம் அண்ணாமலை செட்டியார் ,, | ... | 1 |
| ,, | மண்டி துரைசாமி செட்டியார் தயிர் படி | ... | 4 |
| ,, | நாராயண செட்டியார் ,, | ... | 1 |
| ,, | திருவல்லிக்கேணி மார்க்கட் முனுசாமி ழ் எலுமிச்சம் பழம் | ... | 50 |
| ,, | ஷை தாயாரம்மாள் ,, | ... | 25 |
| ,, | கிருஷ்ணாம்பேட்டை சண்முகசுந்தர கிராமணி இளநீர் | | 100 |
| ,, | மீசாப்பேட்டை ராஜு கிராமணி ,, | ... | 100 |
| ,, | வாழை மரம் | ... | 6 |
| ,, | ம. சம்பந்த ழ் இளநீர் | ... | 25 |
| | குருத்து ஓலை மட்டை | ... | 2 |
| | மாயிலை சுமை | ... | 2 |
| ,, | மளிகை ரங்கசாமி செட்டியார் கடலை எண்ணெய் வீசை | | 2 |
| ,, | ஆயில், அப்பாதுரை ழ் ,, | ... | 1 |
| ,, | மாவுகடை சுப்பிரமணிய செட்டியார் இலைகட்டு | | 1 |
| ம-ா-ா-ஸ்ரீ, | மண்டி நடேசசெட்டியார் காஸ்லைட் | ... | 1 |
| ,, | மண்டி குப்புசாமி நாயகர் ,, | ... | 1 |

| | | |
|---|---|---|
| ம-ா-ா-ஸ்ரீ வரதராஜ அய்யர் காயித ரீம் | ... | 1 |
| ,, ரூபர்ட்பிரஸ் ஜெயராமநாயுடு காகித குயர் | ... | 6 |
| ,, உமாபதி ஷ ,, | ... | 4 |
| ,, கன்னிமாரா பிரஸ் கோவிந்தராஜுலு ஷ ,, | ... | 4 |
| ,, சம்பந்தம் ஷ வரவு செலவு நோட்டீசு இனாமாகப் போட்டுக் கொடுத்தது | ... | 300 |

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ நடராஜ தத்துவம்.

இது

சென்னை, திருவேட்டீச்வரன்பேட்டை
ஸ்ரீ நடராஜ குஞ்சிதபாத பக்தஜன சபையைச் சார்ந்த
பிரம்மஸ்ரீ. ம. க. சுப்பராய குருக்கள் அவர்கள்
ஸ்ரீமத். சி. ஆதிகேசவுலு நாயுடு அவர்கள்
வேண்டுகோளின்படி

ஷை பேட்டை கார்ப்பொரேஷன் மாடல் ஸ்கூல்
ஹெட்மாஸ்டரும், செய்யாறு தாலூக்கா பொதியர் பாளையம்
ஸமரஸ ஸன்மார்க்க சங்கத்தின்
அக்கிராஸனருமாகிய
பிரம்மஸ்ரீ ந. சுப்பிரமணிய அய்யர் அவர்களால்
இயற்றப்பட்டு.

---

ஷை சபையின் டைரக்டர்களுள் ஒருவரான
ஸ்ரீமத். கு. கதிர்வேலு முதலியார் அவர்களால்
தமது
நோபில் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

---

1923.

விலை அணு எட்டு.] [தபால் செலவு வேறு.

*(Copy Right Registered.)*

உ

சிவமயம்.

# முகவுரை.

---

கற்றமூ தறிஞர் கவின்மல ரடிகளை
முற்றவப் பயனால் முறைமையின் வணங்குவாம்.

அருமணிக் கடல்சூழ்ந்த நிலவுலகத்தின்கண் தற்காலம் அநேகமாகிய அவைதிக சமயங்கள் வெளிக் கிளம்பியதால் அநாதியாயுள்ள வைதிக சைவ சமயமானது தாழ்ந்து அதன் மகிமை பெரும்பான்மையராய ஜீவர்களுக்கு நன்கு விளங்காம லிருப்பது மிகப்பிரசித்தமேயாம்; இங்ஙனம் இவ்வைதிக சைவம் தாழ்ந்திருப்பதற்குக் காரணம் அதனைப் பற்றி யாவ ரும் எளிதில் உணர் தற்குரிய நூல்களினின்மையேயாம். வேதம், ஆகமங்கள், உபநிஷத்துக்கள், பிரம்மஸூத்திரம் சிவஞானபோதம் முதலிய பலநூல்கள் வைதிக சிவாத்வை தப் பிரதிபாதங்களாயிருப்பினும், அவை சாஸ்திர வுணர்ச்சி யுள்ளார்க்கேயன்றி மற்றவர்க்குச் சிறிதும் பயன் படுவன வன்றாம்.

ஆதலின் வைதிக சிவாத்வைதத்தைப் பற்றி யாவரும் எளிதில் உணர்தற்குரிய நூல்கள் பல, இக்காலத்தில் வெளி வருவது அத்தியாவசியமாமென எனது நண்பர்களுள் பலர் என்னிடம் கூறியதுண்டு. அவர்களுள் சென்னை, திருவேட் டீச்வரன்பேட்டை ஸ்ரீநடராஜ குஞ்சிதபாத பக்தஜன சபை யைச் சார்ந்த பிரம்மஸ்ரீ ம. க. சுப்பராய குருக்கள் ஒருவ ராவர்.

இவருமை விருப்பத்திற்கிணங்க ஸ்ரீ நடராஜ தத்துவ மென்னுமிச்சிறு நூலைச் சிற்றறிவுடைய யான் இயற்றத் துணிந்தனன். இந்நூலிலுள்ள விஷயங்கள் நம்மனோராகிய சைவர்களுக்கு அத்தியாவசியமாமென இதனை யூன்றிப் படிப்பவர்க்கு நன்கு விளங்கும்.

இந்நூலின் கண் எனது பிரமாதாதி தோஷங்களாற் பிழைகள் நேரிட்டிருத்தல்கூடும். அவற்றை வித்துவ சிரோமணிகள் அன்பு கூர்ந்து தெரிவிப்பாராயின் அவற்றைத் திருத்தி மறுபதிப்பை வெளியிடுவதுடன் அவர்களுக்கு என் மனமார்ந்த வந்தனமுமளிக்கப்படும்.

இந் நூலியற்றுதற்குக் காரண பூதராயிருந்த ஷெ பிரம்மஸ்ரீ ம. க. சுப்பராய குருக்களுக்கும் ஷெ ஸ்ரீ நடராஜ குஞ்சித பாத பக்த ஜன சபையார்க்கும் எனது மனமார்ந்த வந்தனங்களை யளிக்கின்றேன்.

இந்நூலை ஷெ சபையாரின் வேண்டுகோளுக்கிரங்கி இலவசமாய் அச்சிட்டுத் தந்த மா-௱-௱ஸ்ரீ கு. கதிர்வேலு முதலியாரவர்களுக்குத் தேகாரோக்கியமும் ஸகல ஐச்வரிய முமுண்டாமாறு எல்லாம் வல்ல ஸ்ரீ நடராஜப் பெருமான் அருள் புரிவாராக.

இந்நூல் முட்டின்றி யினிது முடிந்தது வைத்தது போலவே யான் இனித்தொடங்கும் நூல்களையும் இனிது முடித்துவைக்க ஸ்ரீ பரமேச்வரன்றன் பதாம்புயங்களைச் சந்ததம் பணிகின்றேன்.

பிழையுளதாயின் உலகம் பொறுக்க.

சிவம்.

திருவேட்டீச்சுவரன்பேட்டை 24—1—23 } இங்ஙனம்: ந. சுப்பரமணிய அய்யர்.

உ

## பண்டிதர்களின்

# அபிப்பிராயம்.

---

நம்மனோர் ஸர்வ துக்க நிவிர்த்தி—பரமாநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷத்தை யடைதற்கு முறையே சாதனமாயிருப்பன கர்மம், பக்தி, ஞான மென்பனவாம்; அவற்றுள், பக்தி கர்மத்தை நிஷ்காமியமாகச் செய்தற்கும், ஞானத்தைச் சித்த சுத்தி வாயிலாக வெளிதி லுண்டாக்குவதற்குஞ் சாதனமா யிருப்பதாம். அது, பொருள் அறத்தையும் இன்பத்தையு முண்டாக்குவதற்குச் சாதனமா யிருத்தல் போலவாம். பக்தியோ, குருபக்தி, ஈச்வரபக்தி யெனச் சிறப்புவகையா லிரு வகையா யிருப்பதாம்.

அவற்றுள், ஈச்வரபக்தி குருபக்தியை மேன்மேலும் பெருகச் செய்வதற்கும், அவரை (குருவை) ஈச்வர ஸ்வரூபமாகப் பாவிப்பதற்கும் தக்க சாதனமா யிருத்தலின், நம்மனோர்க்கு மிக முக்கிய சாதனமா யிருப்பது ஈச்வர பக்தியேயாம்.

ஈச்வர பக்தியோ, அவர் கொண்டருளிய பல அவதார விசேஷங்களால் பலவகைத்தாம். ஈச்வரனது அவதார விசேஷங்களுள், ஸ்ரீ நடராஜமூர்த்தி அவதாரம் எஞ்ஞான்றும் பரம சாந்தஸ்வரூபமாகவே யிருப்பதாதலின், அம் மூர்த்தியின் பக்தி, ஈச்வரபக்தியுள் மிகச் சிறந்ததாம்.

ஸ்ரீ நடராஜ பக்தி யல்லது தியானம் நம்மனோர்க்கு மிகச் சிறந்ததா மென்பதை விளக்குதற் பொருட்டன்றோ

சாந்தோக்கிய உபநிடத முதலியன அதனை வியந்து கூறு கின்றன.

ஈச்வர தியானங்களுள் மிகச் சிறந்ததாயுள்ள ஸ்ரீ நடராஜமூர்த்தித் தியானத்தை, நம்மனோர் தேசிக மூர்த்தியின் வாயிலாகக் கேட்டுணர்ந்து செய்வாராயின், அவர்க்குச் சமையலுக்குத் தீப் போல மோக்ஷத்திற்கு நேர் சாதனமாயுள்ள தத்துவஞானம் எளிதிலுண்டாகுமென்பதை நன்கு விளக்குதற்பொருட்டு சென்னை—திருவேட்டீச்வரன் பேட்டையில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள ஸ்ரீ நடராஜ குஞ்சித பாத பக்தஜன சபையைச் சார்ந்த பிரம்மஸ்ரீ ம-க-சுப்பராய குருக்களின்வேண்டுகோளுக்கிரங்கி, சென்னை—திருவேட்டீச்வரன் பேட்டை, வல்லப அக்கிரஹாரம், கார்ப்பொரேஷன் மாடல் ஸ்கூல் ஹெட்மாஸ்டரும், என தாப்தருமாகிய பிரம்மஸ்ரீ ந-சுப்பிரமணிய அய்யரவர்கள், ஞான சாஸ்திரம் பலவற்றைப் பல்லாறாகத் தக்கார் வாயிலாக ஆராய்ச்சி செய்ததன் பலனாக ஸ்ரீ நடராஜ தத்துவ மென்னும் இந்நூலை இயற்றினார்.

இதில் ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் ஸ்வரூபம், அம்மூர்த்தியைத் தியானஞ் செய்தற்குரிய சாதனங்கள், விபூதி,—உருத்திராக்ஷம்,—பஞ்சாக்ஷரங்களின் ஸ்வரூபம் தத்துவம் முதலியன தக்க பிரமாணங்களுடன் செவ்விய வசன நடையில் எழுதப்பட்டிருக்கின்றன.

இந்நூலைச் சற்குரு உபதேசமாகப் பாவித்துப் படித்து இது கூறுகின்றபடி ஸ்ரீ நடராஜ மூர்த்தியைத் தியானஞ் செய்து வருகின்றவர், புருஷார்த்தங்களுள் மிகச் சிறந்ததாயுள்ள ஸர்வ துக்க நிவிர்த்தி—பரமாநந்தப் பிராப்தி வடிவ கைவல்லிய நிலையை யெளிதில் அடைவரென்பது எனது அபிப்பிராயமாம்.

ஸ்ரீநடராஜ மூர்த்தியின் ஸ்வரூப முதலியவற்றை நன்கு விளக்கிக் கூறுமிந்நூலை நம்மனோர் தமது பெருந்தனமாகப் பாவித்தேற்று அதன் பயனையடைய வேண்டுமென்பதும் எனது பிரார்த்தனையாம்.

இங்ஙனம்:

10—1—1923. { கோ. வடிவேலு செட்டியார், தமிழ்ப் பண்டிதர், ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல், சென்னை.

---

உழுவலன்புடையீர்!

நீவிர் அன்புகூர்ந் தனுப்பிய ஸ்ரீநடராஜ தத்துவம் என்னுஞ் சிறந்த நூலை முழுவதும் படித்துப் பார்த்தேன். நூல்சிறிதெனினும் அதில் "சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல்" என்னும் அழகு அமைந்திருக்கிறது. நம்மனோர் புறச் சமய வலையிற் சிக்கி, ஈசுவர நம்பிக்கையற்று மனம்போனவாறு செல்லத் தொடங்கிய இக்காலத்தில் வெளிவந்த இந்நூல் எல்லோருக்கும் மிக்க பயன் தருமென்பதில் சற்றும் ஐயமின்றாம்.

இதிலுள்ள விபூதி மகிமை, உருத்திராக்ஷ மகிமை, பஞ்சாக்ஷர மகிமை சாலப் பொருத்தமான விஷயமாம். இவற்றை விளக்கி ஒரு சிறு நூல் செய்ய வேண்டுமென்று நானே சில சமயம் நினைத்ததுண்டு. சிவபெருமான் திருவருளால் இது வெளிவந்தது உலகம் செய்த புண்ணியமேயாம்.

இங்ஙனம், அன்பன்

வரகவி,

குமாரபுரம், சென்னை, 11—1—1923. } திரு - அ. சுப்பிரமண்யபாரதி.

---

# சிறப்புப்பாயிரம்.

செய்யாறு தாலுக்கா, புன்னை புதுப்பாளையம்
எனவழங்கும் பொதியர் பாளையம்,
ஸமரஸ ஸன்மார்க்க சங்கக் காரியதரிசியும்
தருமதிராவிட கலாசாலையின் தமிழ்ப் பண்டிதருமாகிய

**ஸ்ரீமத். பு. ப. மாசிலாமணி முதலியார்.**

இயற்றியது.

அறுசீர் விருத்தம்

உலகுயி ரெலாமுய்ய வுறுநெறியீ தெனவறிஞ
ருரைப்ப வோர்ந்தே
யிலகுசித் தாந்தத்தி னிருஞ்சார மாகவொளிர்ந்
தின்ப மாகு
நலங்கொள்ஞா னாகாய நடராஜ தத்வமென
நாமஞ் சூட்டி
பலகிலொரு நூறமிழி லருளினு னொன்னி
லறையக் கேணமோ. (1)

ஆசார்ய சங்கரனு மருளியம நீஷாபஞ்
சகத்தை யன்பால்
லேசாக வநுசந்தித் தின்பமுறத் தமிழார்பா
லிரக்கம் பூண்டு
பேசாத வநுபூதி பிறங்கிடுமந் நூலைமொழி
பெயர்த்துத் தந்தோன்
தேசாரும் வேற்குமரன் சீர்பாத பக்திசெறி
சித்த முள்ளோன். (2)

சென்னை திரு வேட்டிநகர் சேர்கார்ப்பொ
ரேஷனது பாட சாலை
தன்னிலொரு தலைமையினைப் பூண்டரிய ஞான நூல்
சாலக்கற்றோன்
புன்னைபுதுப் பாளையத்திற் பொருந்துசம ரசச்சங்கப்
பொறுப்பும் பூண்டோன்
நன்னியன்சுப் பிரமணிய ஐயனெனு மபிதானந்
தரித்தோன் மாதோ. (3)

## இந்நூலிற் பிரமாணமாக வெடுத்தாண்ட நூல்கள்.

---

ஜாபாலோபநிஷத்து
தைத்திரீய உபநிஷத்து
காமிகாகமம்
போதாயன கல்பஸூத்திரம்
வாதுளாகமம்
ஸகலாகம ஸாரஸங்கிரகம்
சித்தாந்தஸாராவளி
தேவாரம்
திருவாசகம்
சிவஞானபோதம்
சிவஞானசித்தியார்
உண்மை விளக்கம்
திருவருட்பயன்
சிவப்பிரகாசம்
கோயிற் புராணம்
திருவாதவூரடிகள் புராணம்
* திருக்கடம்பநாத புராணம்
உபதேசகாண்டம்
பிரமோத்தரகாண்டம்
திருக்குறள்
சூதசங்கிதை
சிவதருமோத்தரம்
சைவசமயநெறி
திருமந்திரம்
பஞ்சாக்ஷர ரகசியம்
சௌந்தரியலகரி
ஸ்வாநுபூதி ரஸாயனம்
ஸ்வாநுபூதி ரஸமஞ்சரி
நிஜாநந்த விலாஸம்
தாயுமானவர்

---

* இப்புராணம் திருமாகறலுக்கடுத்த திருக்கடம்பர் கோயில் ஸ்தலத்தினதாம். இந்நூல் திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ. ஈசான தேசிக ஸ்வாமிகளா லியற்றப்பட்டது. இஃ இதுகாறும் அச்சிடப்படவில்லை. இதற்கோருரை யிந்நூலாசிரியரால் செய்யப்பட்டிருக்கிறது. இப்புராணம் கூடிய சீக்கிரத்தில் அச்சிட்டப்பட்டு வெளியாகும்.

# விஷய வரிசிகை.

## உருத்திராக்ஷ மகிமை (33—41).



## பஞ்சாக்ஷர ரகஸியம் (42—49).



## ஸ்ரீ நடராஜமூர்த்தி அபிஷேக பூஜா உற்சவவிதி (50—59).

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 9 | தொண்ட | தொண்டை |
| 6 | 14 | உயிா | உயிர் |
| ,, | 19 | என்ஹு | என்னு |
| 7 | 28 | சாதானம் | சாதனம் |
| 12 | 13 | யும், | யும் உடைத்தாய்த் |
| ,, | ,, | சாப்பத் | சர்ப்பத் |
| 14 | 18 | தொழுலும் | தொழிலும் |
| ,, | 20 | யிரைக்கு | யிசைக்கு |
| 19 | 20 | [illegible] | [illegible] |
| 23 | 10 | வெண்ணீராரமே, | வெண்ணீறாமே |
| 26 | 2 | உல்லது | அல்லது |
| 26 | 7 | தெனிவான | தெளிவான |
| 27 | 11 | தனகஞ் | தகுனஞ் |
| ,, | | உணைற் | உணர்தற் |
| 29 | 21 | ஸொஹம் | ஸோஹம் |
| 42 | 10 | யடி | படி |
| 42 | 5 | கானகி | காங்கி |
| 43 | 17 | கத்ரம் | கந்தம் |
| 45 | 18 | பஞ்சாக்கம் | பஞ்சாக்கரம் |
| 63 | 5 | மனமறிமாத | மனமறியாத |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ நடராஜ தத்துவம்.

காப்பு.

வல்லபை விநாயகர் துதி.

சிற்சொரூ பத்திரு வேட்டிசேர் கூத்தர்தம்
பொற்பிலாத் தத்துவம் புகலுதற் காகுவ
அற்புதஞ் சேர்திரு வருடரும் வல்லபைச்
சிற்பரக் களிறுதன் திருவடி மலர்களே.

ஷண்முகன் றுதி.

தண்மதி சடைக்கூத்தர் தத்துவ மியற்றப்
பண்முக மறைச்சிரமும் பகருதற் கரிதாங்
தண்முக சொரூபருறை சண்பக வனம்வாழ்
சண்முக சிவன்றனடி சந்ததம் நினைப்பாம்.

---

பாயிரம்.

திருவதிகை வீரட்டானம்-காப்புத் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

தெண்ணீர் புனற்கெடில வீரட்டமுஞ்
சீக்காலிவல்லங் திருவேட்டியும்

உண்ணீரோ ரேடகமு மூறலம்ப
ருறையூர் நறையூராணநல்லூர்
விண்ணார் விடையான் விளமர்
வெண்ணிமீயச்சூர்வீழி மிழலைமிக்க
கண்ணார் நுதலார் கரபுரமுங்
கபாலியாரவர்தங் காப்புக்களே.

---

திருச்சிற்றம்பலம்.

திருவேட்டீச்சுவரர் துதி.

திங்கள் தவழும் பெருவெள்ளச் செய்யசடையு மழுமானும்
பொங்கு மரவப் பேரணியும் புலியினதளுங் கரியுரியும்
துங்கநீற்றுப் புண்டரமுந் துலங்கு தலைமாலையு மணியு
மெங்கள் திருவேட்டீச்சுரம்வாழ் இறையை வணங்கி வாழ்த்
[துவமே. (1)

சண்பகவல்லி துதி.

நண்புகொண் மகர்க்கெலா நலங்க ளீண்டருள்
பண்புடை யன்னையாய்ப் பாரில் வேட்டிவாழ்
தண்புனன் மதிச்சடைத் தாணு பக்கல்சேர்
சண்பக வல்லியின் தாளைப் போற்றுவாம். (2)

நடனசபேசர்துதி.

"இதந்தரு மடந்தையொ டியைந்துயி ருடம்புபோல்
விதம்படுல கங்களில் விரிந்தொளி விளங்குவார்
மதங்கமொடு துந்துபி வளங்கெழ முழங்கவே
சிதம்பர நடம்பயில் செழுங்கழ லிறைஞ்சுவாம். (3)

(இதுவுமது.)

உறுதியாகிய சூக்குமந் தூலமென் றுரைக்குங்
குறைவின் மூலமந் திரத்தையே திருவுருக் கொண்டு

மறுவிலா மணிமன்று நின் றிருவர்வாழ்த் தெடுப்பப்
பிறவி நோய்கெட நடம்புரி பிரானடி பணிவாம். (4)

சிவகாமி யம்மைதுதி.

ஆடக சிதம்பர வணங்குமை யணங்கிலாள்
நாடக னனந்த சுகநன்கு புனை பங்கினள்
ஏடக மணம்பொருவ வெங்கணு மியைந்துளாள்
பாடக மிலங்கு சிறு பங்கய மிறைஞ்சுவாம். (5)

(இதுவுமது.)

வளைத்த தெண்டிரை யுடுத்தபா ரிடத்தருண் மகற்கா
யளித்த தாய்முனம் புரிதொழின் மீட்டுமாற் றுதல்போற்
றளித்தவா ருயிர் பொருட்டரு ணடந்தனிக் காணூஉத்
திளைத்தெக் காலமுங் கண்டரு டேவிதா டொழுவாம். (6)

திருச்சிற்றம்பலத் துதி.

தற்பதமாய்ப் பரபதமாய்த் தாவிலனு பூதியதா
யற்புதமா யாரமுதா யாநந்த நிலயவொளிப்
பொற்பினதாய்ப் பிரிவிலதாய்ப் பொருளாகி யருளாகுஞ்
சிற்பரமா மம்பரமாந் திருச்சிற்றம்பலம் போற்றி." (7)

பாயிரம் முற்றிற்று.

---

## நூல்.

### ஸ்ரீநடராஜ தத்துவம்.

புலவர்புகழும் புண்ணிய பூமியாகிய பாதகண்டத்தின் தென்பாரிசத்தில் மன்னுயிரைத்தன் னுயிர்போற் கருதிச்செங்கோல்செலுத்திவந்த தொண்டைமான் சக்கிரவர்த்தியால் ஆளப்பட்டு வந்ததும்,

“செழுநல் வித்திடல் படைப்பதாய் வளர்ப்பதே திதியாய்
வழுவிடா தறத் துயர்த்துவ தழிப்பொடு மறைப்பாய்க்
குழுவி னல்குதல் அருளெனக் கூத்தனைந் தொழில்சேர்
உழவ ரான்மிக வுயர்வது தொண்டைநன் னாடு.
பிறக்கு நானிலத் துயிர்க் கெலாம் பேருட்டாயாய்ச்
சிறக்கு மெம்பெரு மாட்டியுந் திருக்கயி லையைவிட்
டறத்தின் மேம்படு மெட்டுநா லறஞ்செயற் கிடமாய்த்
துறக்க நாட்டினுஞ் சிறந்தது தொண்ட நன்னாடு.
பொன்மை நீடு நற்றுகளலாற் பிறிதுகள் பொருந்தாத்
தன்மை நீடுநல் லறம்பயில் குடிபல தழைத்து
நன்மை நீடுபொன் மாளிகை நகர்பல வுடைத்தாய்த்
தொன்மை நீடிய வளத்தது தொண்டை நன்னாடு.”

என்று ஆன்றோரால் சிறப்பித்துக் கூறப்பட்டது மான தொண்டை நன்னாட்டிற் சிறந்து விளங்குந் திருஒற்றியூர், திருமைலாப்பூர் என்னுந்திவ்ய க்ஷேத்திரங்க ளிரண்டிற்கும் இடையிற் பிரகாசித்து, ஸ்ரீ மகாலக்ஷ்மி சிவபெருமானை வழிபட்டுத் திருமணவாழ்வெய்திய காரணத்தினால் “திருவேட்டிநகர்” “திருவேட்டீச்சுரம்” “சண்பகவனம்” என்று பிரசித்தியடைந்து, சைவ—சமயாசார்ய சுவாமிகளுள் ஒருவராகிய ஸ்ரீமத் அப்பர் சுவாமிகள், திருவாய் மலர்ந்தருளிய திருவதிகை வீரட்டானம்—காப்புத் திருத்தாண்டகத்தில் வைப்பு ஸ்தலமாயருளிச் செய்திருக்கும் மஹிமாதிசயம் பெற்றுள்ள திருவேட்டியம் பதியில் அடியார்க் கருள்புரியத் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் எல்லாம் வல்ல இறைவன் நம்மனோர் நன்னெறி கண்டுய்யுமாறு கொண்டருளிய * சைவத் திருமூர்த்தமிருபத்தைந்தனுள் ஸ்ரீ நடராஜ மூர்த்தம்மிகச் சிறந்ததாம்.

---

* சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர் அர்த்தநாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீல கண்டர், சக்ரப்பிரதர், சகமுகாநுக்கிரகர், ஸோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாஸீனர், தக்ஷிணாமூர்த்தி, இலிங்கோற்பவரென்பன சைவத் திருமூர்த்தங்களாம்.

## நடராஜ சேவையின் சிறப்பு.

இந்நடராஜமூர்த்தி பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலிய மகாத்மாக்கள் பரமாநந்த மயமாய் விளங்கும்படி பூலோகத்தின் கண் ஆநந்த நடனஞ் செய்தருளுகின்றாராதலின் அம்மூர்த்தியினது பாதசேவையே நாம் பரமானந்த மடைவதற்குத் தக்கவேதுவாம். இதுபற்றியன்றோ சான்றோர், "காதரமார் தருமனமே நிலைகலங்கே லினிமன்றி, லாதரமா நடனுடு மண்டனடங் கண்டனையால்" என்று கூறியிருக்கின்றனர்?

கரண வியாபாரமுடைய ஒவ்வொரு பிராணியும் துக்க நீக்கத்தினையும் சுகப்பேற்றினையும் விரும்புவ தியல்பாயிருத்தலின், மெய், வாய், கண், மூக்குச் செவியென்னும் ஐம்புல வுணர்வோடு மனவுணர்வையும் உடைய மக்கள் துக்கநீக்கத்தினையும், சுகப்பேற்றினையும் விரும்பாதிரா ரென்பது நமதனுபவத்தினால் விளங்குதலின், துக்க நீக்கத்தினையும் சுகப்பேற்றினையும் கருதி ஸ்ரீநடராஜ மூர்த்தியினது திருவடிகளைத் தஞ்சமாக வடைந்து அன்புமிக்குச் சேவித்தலே நமது முக்கியக் கடமையாம்.

பெருந்துன்ப முற்ற ஒருவன் தன் துன்பத்தை யொழித்து இன்பத்தை யடையப் போராற்றலும் பெருங் கருணையு முடைய ஒருவனை ஆதாரமாக வடைந்து அவனது திருவடியில் விழுந்து பிரார்த்திப்பது போலப், பிறப்பென்னும் பெருந்துன்பமுடைய நாம் அத்துன்பத்தினை யொழித்து முத்தியென்னு மின்பத்தினையடையுமாறு முடிவிலாற்றலும் பேரருளுமுடைய ஸ்ரீநடராஜ மூர்த்தியைத் தஞ்சமாக வடைந்து அம்மூர்த்தியின் இன்பமணங்கமழும் பொற்பாத கமலங்களில் விழுந்து பிரார்த்தித்தல் வேண்டும். இதுவே நமக்கு இம்மைக்கும் மறுமைக்கும் உறுதியான துணையாகும்.

பாதசேவையே பரமானந்தம் பெறுதற்குத் தக்க சாதனமாயிருப்பது பற்றியன்றோ தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனர் "கற்றதனா லாயபய னென்கொல் வாலறிவ, னற்றாடொழாஅ ரெனின்" "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடு

வாழ்வார்'' "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கி யாண்டு மிடும்பையில'' "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா,ரிறை வனடி சேரா தவர்'' என்று - திருவாய் மலர்ந்தருளினர்.

## ஸ்ரீ நடராஜ கோலத்தின் ரகசியம்.

தீவேட்டீச்சுரமாகிய சிதம்பரத்தின்கண், (அதாவது திரு - முத்தித்திரு; அதாவது ஞானம் அல்லது வித்தை; வேட்ட-ஐக்கியப் பட்ட; ஈச்சுரம் - பரம்பொருளுக் குறைவிடம் அதாவது தஹரா காசம் அல்லது சிதாகாசத்தின்கண்) கண்ணுதற்பெருமான் நடராஜ கோலமாக விருந்தாடுவது "அப்பெருமான் அசைந்தாலன்றி அணு வும் அசையாது ; அப்பெருமான் ஆட்ட உயிருள்ள பொருள் உயி ரில்லாத பொருளென்னு மிரண்டுமாடுகின்றன" என்பதை விளக்கு வதாம். இதுபற்றிதான் பெரியார் "ஆட்டுவித்தா லாரொருவராடா தாரே'' என்று திருவாய் மலந்தருளினர். இந்த நடராஜ கோலம் "உயிரகட்கு இயல்பாக ஒரு சுதந்தரமுமில்லை. சிவத்தின் சன்னி தான விசேஷத்தால் அவை சுதந்தா முடையனபோற் காணப்படு கின்றன''வென்னுமி ரகசியார்த்தத்தைக் குறிப்பித்து நிற்பதாம்.

## ப்ஞ்சபூத ஸ்தலங்கள்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பூத பஞ்ச லிங்கஸ்தலங்களில் சிதம்பரம் ஆகாயலிங்க ஸ்தலமாயிருத்தலால் அதன்கண்ணெழுந் தருளி யானந்தத் தாண்டவஞ் செய்யும் எம் பெருமானது திருக்கைக்குறி ஆகாயம் போல ஒன்றோடும் பற்றது "என்னையார் அடைகின்றார்களோ அவர்களை யான் எனதென் னும் இருவகைப் பற்றினின்றும் நீக்கிப் பரமானந்தமாய் விளங் கும்படி செய்கின்றேன்'' என்று அறிவிப்பது போலவாம். இது பற்றித் தான் திருநாவுக்கரசு சுவாமிகள் "கைந்நின்ற வாடல்கண் டாற் பின்னைக்கண் கொண்டு காண்பதென்னே'' என்று திருவாய் மலர்ந்தனர்.

காஞ்சிபுரத்தில் பிருதிவி லிங்கமும், திருவானைக்காவில் அப்பு லிங்கமும், திருவண்ணமலையில் தேயுலிங்கமும்,சீகாளத்தியில் வாயு

லிங்கமும்,சிதம்பரத்தில் ஆகாயலிங்கமு மிருத்தலால் சிதம்பரநடன மூர்த்தி உண்மையாகத் தமக்கெனக் குறிக்கப்பட்ட ஓருருவு மில்லாதவ ரென்பதும் அன்பர்கள் விரும்பியவாறு பல்வேறு உருவங்களைக் கொள்ளுபவ ரென்பதும் அறியத்தக்கனவாம். அங்ஙனமறிந்தவர்க்கே சித்தசாந்தி சிதம்பரமாத் தானேதிகழும் அனுபவமுண்டாம்.

## பஞ்ச நடனசபைகள்.

இந்நடராஜப்பிரான் நடனஞ் செய்யும் ஸ்தலங்கள் சிறப்பாக வைந்தாம். அவை திருவாலங்காடு, சிதம்பரம், மதுரை, திருநெல்வேலி, திருக்குற்றால மென்பனவாம். இவற்றுள் நடனசபைகள் முறையே இரத்தினசபை, பொற்சபை இரசித (வெள்ளி) சபை, தாமிர(செம்பு)சபை, சித்திரசபை யென்பனவாம். இவ்வைந்து சபையிலும் அன்புடன்சென்று அருள்நடங் கண்டு இன்புருவானவரே இனிப்பிறவா நிலையை யடைவரென்க.

## நடராஜர்வடிவமே பஞ்சாக்ஷரமேனல்.

அன்பரெல்லாம் என்புருகிப் பரவசமாகும் வண்ணம் ஸ்ரீசந்திரசேகரன் சூக்கும பஞ்சாக்ஷர மென்றும், ஒருதலை மாணிக்கமென்றும் சொல்லப்படும் “சிவாயநம” என்னுந் திருவஞ்செழுத்தின் திருவுருக்கொண்டு உயிர்க்கு நேர்ந்துள்ள பிறவிப் பிணியென்னும் அபாயமற ஆநந்த நிருத்தஞ்செய்தலை அறிந்தவர்க்கன்றே அநாதியாகத் தொடர்ந்து வந்துள்ள பிறப்பிளமை மூப்புப் பிணியோடாஞ் சாக்காடு ஒழியும். இதுபற்றியன்றே ஔவைப்பிராட்டியார் “சிவாயநமவென்று சிந்தித் திருப்போர்க் கபாயமொருநாளு மில்லை” யென்றருளிச் செய்தனர்,

மனம், வாக்குக் காயமென்னும் திரிகரணமும் மாறுபாடின்றி யொருமைப்பாடு பெற்றவிடத்துத்தான் சிவாநந்த நிலையுண்டாவதாயிருத்தலின், அதற்குரியசாதனம் மேற்கூறியவாறு பஞ்சாக்ஷர வடிவமாய் மலைமகள்காண மகிழ் வுடனுடும் ஸ்ரீநடராஜ வடிவமேயாம். வாக்கால் பஞ்சாக்ஷர ஜபமும், மனத்தால் பஞ்சாக்ஷரதியா

னமும், ஒளியுமிடத்துக் கண்ணுற் காணும் பஞ்சாக்ஷரம் ஸ்ரீ நடராஜ விக்கிரகமன்றி வேறொன்று இன்மையின் அம்மூர்த்தியைத் தரிசித்தல் அத்தியாவசியமாம்.

நடராஜமூர்த்தியே பஞ்சாக்ஷரவடிவ மேன்பது.

அந்நடராஜப்பெருமான், திருவடி 'ந'காரமாகவும், திருவுந்தி 'ம'காரமாகவும், திருத்தோள் 'சி'காரமாகவும், திருமுகம் 'வ'காரமாகவும், திருமுடி 'ய'காரமாகவும், கொண்டு ஹிருதய குகையாகிய தகராகாச மென்னும் சிதம்பரத்தின்கண் ஆநந்த தாண்டவஞ் செய்தலைச் சற்குரு மூலமாய்ச் சந்தேகவிபரீதங்களற வறிந்து அந் நடனத்தின் உண்மையை யாய்ந்து அறிபவர்க்கே இனிப் பிறவா நிலையுண்டாம்.

ஆகாயமானது பூதாகாயமென்றும், மனாகாயமென்றும், சிதாகாயமென்றும் மூன்றுவகைப்படும். இம் மூன்ருகாயங்களிலும் சச்சிதாநந்தப் பரம்பொருள் நடித்து ஜீவர்களுக்கு இம்மை, மறுமை வீடென்னு மூன்றையும் அருளிச் செய்கின்ருர் என்பது வேதாகமங்களின் சித்தாந்தமாம்.

1. பூதாகாய நடன சேவையாவது ஆங்காங்குள்ள சிவதலங்கள் பலவற்றுள்ளுஞ் சென்று குறிப்பிட்ட நாட்களில் ஆகம விதிப்படி ஸ்ரீ நடராஜப் பெருமானது திருக்கூத்தைத் தரிசித்தலேயாம்.

2. மனாகாய நடன சேவையாவது பஞ்சாக்ஷர வடிவமாய் விளங்கும் ஸ்ரீ நடராஜமூர்த்தியை மனத்தால் நன்கு தியானித்தலேயாம். இது ஒருமுகப்பட்ட மனத்துக்கே சாத்தியமாம். இப்பஞ்சாக்கரமே சகளம், சகளநிஷ்களம், நிஷ்களம் ஆகியமுவ்வகை மூர்த்தங்களுக்குந் திருமேனியாம். இதன் விளக்கம் பின்னர் பஞ்சாக்ஷர மகிமையில் நன்கு கூறப்படும்.

3. சிதாகாய நடனசேவையாவது "பஞ்சாக்ஷரத்தின் லக்ஷியார்த்தமாகிய சிவமே நான்" என்று ஸோஹம் பாவனை செய்வதாம்; இதுவே சிவயோகமெனப்படும். பூதாகாய நடனசேவையால் இம்மைப்பயனும், மனாகாய நடன சேவையால் மறுமைப்பயனும்,

சிதாகாய நடனசேவையால் வீடும் சித்திக்கின்றன. ஆதலின், இம் மூன்று சேவையும் அவ்வவ்வதிகாரிகளுக்குத் தக்கவண்ணம், அது வது அவரவர்க்கு அத்தியாவசியமாம்.

### ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் வடிவம்.

"திருவடிநிலையும் வீசுஞ் செய்யகா லுஞ்சிலம்பு
முருவளரொளியும் வாய்ந்த வூருவுமுடுத்த தோலு
மரைதருபுரிவுங் கச்சி னணிகளு மழகாருந்தி
மருவியவுதரபந்தக் கோப்புநூல் வாய்ப்பு மார்பும்.

வீசிய செய்யகையும் விடதாக் காங்கவித்த
தேசும் வண்டுடியுமங்கிச் செறிவுமுன் திரண்டதோளுங்
காசைகொண் மிடறுந்தோடார் காதும்வெண் குழையுங்காண
மாசிலா மணிவாய்விட்டு வழங்கிடா நகைமயக்கும்.

ஓங்கிய கமலச்செவ்வி யொளிமுக மலருங்கண்கள்
பூங்குழ லுமையைநோக்கும் புரணடும் புருவப்பொற்பும்
பாங்கமர் நுதலும்பின்றூழ் படர்சடைப் பரப்பும்பாம்பு
நீங்கருந் தாருநீரு நிலவுமே னிலவுநீறும்."

அதாவது முயலகன்மேல் நின்றருளிய திருப்பாதமும், தூக்கியருளிய சிவந்த திருப்பாதமும், பாதங்களிற் சாத்தியருளிய திருச்சிலம்பும், திருமேனியிலே மிகுத்த பிரகாசமும், சிறந்த திருத்தொடையும், அணிந்தருளிய புலித்தோலாடையும், திருவரையிலே பொருந்திய நெறிப்பும், திருவரையிலே தரித்தருளிய கச்சின் அழகும், அழகு பொருந்திய திருவுந்தியிலே பொருந்திய உதரபந்தனச் சேர்வையும், உபவீதம் பொருந்துதலையுடைய திருமார்பும், வீசியருளிய சிவந்த திருக்கரமும், பாம்பைக் கங்கணமாகவுடைய திருக்கரத்தைக் கவித் தருளிய பிரகாசமும், வளவிய தமருகமும், தீயகலும், முன்திர ண்ட தோள்களும், நீலகண்டமும், திருத்தோடு பொருந்திய காது களும், குற்றமில்லாத பவளம்போன்ற திருவாயிலே வெளிப்படும் திருமுறுவலினது மோகனமும், மேலாகிய செந்தாமரை மலர்போ

விண்ணப்பஞ் செய்துகொள்ளக், கைலாசபதியான மகாதேவன், தேவர்களுக்கு இரங்கி, அபயங் கொடுத்து, மந்தரம், கேசரி மலைகளை யச்சாகவும், சூரிய சந்திரர்களைச் சக்கரங்களாகவும், பதினான்கு லோகங்களையும் தேர்த்தட்டுகளாகவும், ஆகாயத்தை யாசனமாகவும், உதயாத்தமய மலைகள் தேர்க்கொடிஞ்சியாகவும், நதிகள் கொடிகளாகவும், நக்ஷத்திரங்கள் விதானமாகவும், ஸ்வர்க்க லோகம் மேல்விரிவாகவும், அஷ்டகுல பர்வதங்கள் தூண்களாகவும், நான்கு வேதங்கள் குதிரைகளாகவும் அமைக்கப்பட்ட ரதத்திலே யெழுந்தருளி, கங்கை முதலியதேவமாதர்கள் சாமரமிரட்டவும், ஊர்வசி முதலிய கணிகை மாதர்கள் நடனஞ் செய்யவும், மகாமேருமலையை வில்லாகவும், ஸரஸ்வதியை வில்லிற் கட்டிய மணியாகவும், வாசுகியை நாணாகவும், விஷ்ணுவைப் பாணமாகவும், அக்கினி தேவனை அவ்வம்பின் கூர்வாயாகவும், வாயுதேவனை அம்பிறகாகவும், கொண்டருளி, பிரமனாகிய ஸாரதி, பிரணவமாகிய தூண்டுகோல் கொண்டு செலுத்தத் திரிபுராசுரர்களைத் தம்முடைய புஞ்சிரிப்பாகிய அக்கினியால் நீறாக்கி யருளினர் என்பது புராணாதிகளில் பிரசித்தமாம்.

மந்த ரத்தொடு கேசரி நெடுவரை வாங்கித்
தந்து திண்டிற லச்செனப் படுத்தினர் தழைக்குஞ்
செந்த ணிக்கதி ரினைத்தைவெண் டிங்களைத் திருத்தி
யுந்து பேரெழி லாழிகொண் டவைக்கடை யுறுத்தி.

ஏழி ரட்டியென் றுரைத்திடு மிருநிலப் பரப்பைச்
சூழ்த ரப்படு நிலங்களீ ரேழெனத் தொகுத்தார்
யாழி வாளரிப் பிடரிடு மாசனப் பரப்பை
யாழி யொத்தலர் தட்டினோர் தட்டகத் தமைத்தார்.

எழுத் ருமறையனைத்தையும் பரியென வியற்றி
வழுவ றக்குறை நிரப்பின ரரிமுதல் வானோ
ரொழுகு மாயிரங் கொடுமுடி வடவரை யோங்கல்
தழுவு செங்கையிற் பினாக மொத்தமைத்தனர் தந்தார்.

பொறிப்பணுட்டி வாசுகி நாணெனப் பொருத்தி
வெறிப்ப சுந்துழா யலங்கலோன் கணையென வியப்பக்
குறித்த வெந்நுதி பாவகற் பொருத்தினர் குதைவாய்ச்
செறித்த தூவலே வாயுவிற் செறித்தனர் திருத்தி.

முன்னே மாதவர் கடைப்பிடி யிருந்தவா முளரி
யன்ன வூர்தியும் வலவனுத் தமர்ந்தன னமையாத்
தொன்ன லந்தருகுடிலே மத்திகையெனத் தொகுத்தார்
பின்னர் வானவர் சேனையொத் தெழுந்தனர் பிரியார்.

என்று உபதேசகாண்டங் கூறுவது ஈங்குணர்தற் பாலதாம்.

இதன் தத்துவமாவது.

“ அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாரே,”

என்று திருமூலர் திருமந்திரத்தி லுபதேசித் திருப்பதை நாம் சிறி தாகித்துப் பார்ப்போமாயின், காமம், வெகுளி, மயக்கமென்னும் மூன்று அசுரர்கள் தேவர்களாகிய ஜீவர்களின் சச்சிதாநந்த வடிவ ஆன்ம சொரூபதை மறைத்துச் சமுசார வடிவ துன்பத்தை யுண் டாக்கினரென்றும்,காமாதிகளாகிய துர்வாஸனைகளால்மொத்துண்ட ஜீவர்கள், பரமசிவனும் சற்குருவை யடைந்து பிரார்த்திக்க, அவர், ஜீவர்களாகிய தேவர்கள்மாட்டுக் கருணைகொண்டு, ஞான நேத்திரத் திருஷ்டியால், துர்வாஸனைகளாகிய அசுரர்களை யெரித்தருளினர் என்றும் நன்கு புலப்படுகின்றது. இதுவே இதன் தத்துவ மாம். இதனுல் சமுஸார பந்த நீக்கத்திற்கு ஞான விசா ரமே சாதனம் ; மற்றவை யன்றெனத் தெளிவாய் ஏற் படுகின்றது. வில்லாகிய மேருவும், நாணுகிய வாஸுகியும் அம்பா கிய விஷ்ணுவும், அம்பின் வாயாகிய அக்கினியும் திரிபுர ஸம்ஹார காரியத்திற்குச் சற்றும் பயன்படவில்லை; மற்றோ, பரம

சிவம், தன் னுடைய மூன்று நேத்திரங்களையும் திறந்து புன்சிரிப்புடன் திருஷ்டித்த நோக்கே அஞ்ஞான காரியமாகிய துர் வாஸனைகளை யொழித்தது. இத் திருஷ்டியேதான் ஸாத்திய உருத்தி ராக்ஷமாம். ஆத்மாநு ஸந்தான அகண்டாகார விருத்தியும் ஸாத்திய உருத்திராக்ஷமாமென ஆன்றோர் கூறுவர். இவ்வுருத்திராக்ஷத்தை மத்திமாதிகாரி (அப்பியாசி)கள் பாவித்து அணிதல் அத்தியாவசிய மாம்.

ஸாதன உருத்திராக்ஷம் :— வேதாகமங்களிற் கூறிய விதிப்படி இதன் ஸ்வரூபம், வகைகள், உற்பத்திகாரணம், தரிக்கவேண்டிய இடங்கள் முதலியவற்றைச் செவ்வனே அறிந்து, இது பரமசிவத் தின் அருள் நோக்கமே யாமென்று பாவிக்கின், அது ஸமாதியாகிய ஸாத்திய உருத்திராக்ஷநிலையையும்,சிவவடிவாகவே யிருக்கும் வீதத உருத்திராக்ஷ நிலையையும் அடைவிக்கும் என்பதில் ஓரையமு மின் ரும்.இது வேதாகமங்களின் துணிபாம்.இதுவே ஜனனமரண வடிவ நோயை நீக்கவல்ல மணியாம். ஆதலால் பிறப்பை யொழிக்க முய லும் ஒவ்வொருவரும் இதனைப் பக்தியோடு அணிதல் வேண்டும். இனிப் பவநோயை யொழிக்க வல்ல மந்திரமாகிய பஞ்சாக்ஷரத் தைப்பற்றிச் சற்று ஆராய்வோம்.



# பஞ்சாக்ஷர ரகசியம்.

---

திருச்சிற்றம்பலம்.

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
யோதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நானகினு மெய்ப்பொரு ளாவது
நாத னும நமச்சி வாயவே."

திருச்சிற்றம்பலம்.

பஞ்சாக்ஷர மென்பது ஐந்தெழுத்துக்களைக் கொண்ட ஓர் மஹாமந்திரமாம். மந்திர மென்பது, தன்னைக் குருமுகமாய் விதிப் யடி தெரிந்து, மனனஞ் செய்பவனைச், சகல துன்பங்களினின்றும் ரக்ஷிப்பதாம். இது ஸப்தகோடி மகாமந்திரங்களினும் சிறந்து விளங் குவதாம். அன்றியும், யஜுர் வேதத்தின் காண்டங்கள் எழனுள் நடுக்காண்டத்தின் மத்தியில் ஸ்ரீ ருத்ராத்தியாயமென்னும் சதருத் ரீய மந்திரஞ் சிறந்து விளங்குகின்றது. அச் சதருத்திரீயத்தின் மத் தியில் நாயகத்தன்மை பூண்டு பிரகாசித்துக் கொண்டிருப்பதே 'நமசிவாய" என்னும் சிவ பஞ்சாக்ஷரமாம். இது,

"மும்மறையு ணடுமறையின் முனிவிலெழு காண்டத்துட்
செம்மைதரு நடுக்காண்டஞ் சேர்ந்தவெழு சங்கிதையி
லம்மநடுச் சங்கிதையி னுதியீரெ ழித்துநடுப்
பெம்மனுற வுயர்மனுவின் பொருளாவானெனவன்மைந்த.

என்னும் ஆன்றோர் திருவாக்காற் பெறப்படுவ துணர்க.

அன்றியும், வேத புருஷனுகிய பாமேச்வானுச்கு யஜுர் வேதம் சிரசாகவும், அதன் நடுவேயுள்ள ஸ்ரீ ருத்திரம் முகமாகவும், அந்த ஸ்ரீ ருத்திரத்தின் மத்தியிலேயுள்ள பஞ்சாக்ஷரம் கண்ணுகவும்,

அப் பஞ்சாக்ஷர மத்தியிலேயுள்ள "சிவ" என்பது கண்மணி யாகவும் அமைந்து விளங்குகின்றன. இதுதான் உருத்திராக்ஷமாம். இத்தகைய மகிமை வாய்ந்த பஞ்சாக்ஷரத்தை யெந்த ஜீவனுனவன் பக்தி, விசுவாசத்துடன் ஜெபிக்கின்ருனே அவன் பிறப்பென்னும் பெருவியாதியினின்றும் நீங்கிப், பேராநந்த நிலையை யடைவனென் பது வேதாகமப் பிரசித்தமாம். இத்தகைய பஞ்சாக்ஷர வடிவமே ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் ஸ்வரூபமாமென்று முன்னர் கூறப்பட் டது. ஆதலால் இப்பஞ்சாக்ஷரமே பரமசிவத்தின் வாசகமாகும்;

"சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கெனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரமபய கரம்—பார்க்கிலிறைக்
கங்கிநகர மடிக்கீழ் முயலகனுர்
தங்கு மகரமது தான்."

என்பதனுல், ஸ்ரீ நடராஜ மூர்த்தியே பஞ்சாக்ஷரமாம்.

பஞ்சாக்ஷரத்தின் நகார, மகார, சிகார, வகார, யகாரங்களாகிய ஐந்து யெழுத்துக்கள் ஆகாயம், வாயு, அக்கினி, ஜலம், பிரிதிவி என்னும் பஞ்சபூதங்களையும், சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தமென் னும் பஞ்சதன் மாத்திரைகளையும், வாக்கு, பாதம், பாணி பாயுரு உபஸ்தமென்னும் பஞ்ச கன்மேந்திரியங்களையும், சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணமாகிய பஞ்ச ஞானேந்திரி யங்களையும், புத்தி, அகங்காரம். சித்தம், மனம் உள்ளம் ஆகிய அந் தக்கரண பஞ்சகத்தையும், நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதையென்னும் பஞ்சகலைகளையும், கன்மசாதாக்கியம், கர்த் துருசாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், சிவசாதாக்கியம் என்னும் பஞ்ச சாதாக்கியங்களையும், பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தியாகிய பஞ்சசக்தி களையும் ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோ ஜாதம் என்னும் பஞ்சப் பிரம்மங்களையும், பிரம்மா, விஷ்ணு உருத் திரன், மகேசுவரன், ஸதாசிவன் என்னும் பஞ்சகர்த்தாக்களையும், சிருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரம், திரோபம், அநுக்கிரகம் என்னும் பஞ்

சகிருத்தியங்களேயும், அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம், என்னும் பஞ்சவர்ணகங்களேயும், தமக்குள் அந்தர்ப் பூதமாக்கிக் கொண்டு, சப்த நிஷ்டமாகிய பிரபஞ்சங்களுக் கெல்லாம் ஆதாரமாய் விளங்கிக் கொண்டிருக்கின்றன.

குறிப்பு:—இதன் ரகசியம் குருமுகமாய் அறிந்தாலொழியப் பயன் படுவதில்லை யென்றறியவும்.

## பஞ்சாக்ஷரத்தின் வகைகள்.

ஆன்மாக்களின் அதிகாரத்திற்குத் தக்கவாறும், அவரவர்கள் உத்தேசிக்கும் பயனுக்குத் தக்கவாறும் இப்பஞ்சாக்ஷரமே பலவகையாகக் குரவர்களால் உபதேசிக்கப்படும். இப்பஞ்சாக்ஷரத்தோடு பிரணவத்தைச் சேர்க்கின் "ஷடக்ஷர" மெனப்படும், இது (ஷடக்ஷரம்) சூதசங்கிதை முதலிய பிரமாண நூல்களில் மிகப் பிரசித்தமாம்.

"பிரணவ மெழுவா யதன்பினர் நகாரம்
பேசிடு மதன்பினர் மகாரம்
வரமுறு மதன்பின் சிகாரமற் றதன்பின்
வயங்கிடு வகர வாகார

முரவுறு மதன்பின் யகாரஞ் சாபால
வுபநிடதஞ் சொலு மிவ்வா
றரவணி சடையாற் கன்பர்காண் முறையி
னறிகவிச் சடக்கர மனுவை."

என்று சூதசங்கிதை கூறுவதிங் குணர்தற் பாலதாம்.

பஞ்சாக்ஷரம் ;—ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம், மகாகாரணம், மகாமனு வென ஐவகைப்படும். அவையாவன :—

1. ஸ்தூல பஞ்சாக்ஷரம்:— "நமசிவாய"
2. ஸூக்ஷ்ம பஞ்சாக்ஷரம்:— "சிவாயநம"
3. காரண பஞ்சாக்ஷரம்:— "சிவயசிவ"
4. மஹாகாரண பஞ்சாக்ஷரம்:— "சிவ"
5. மஹா மனு:— "சி"

குறிப்பு :—ஸூக்ஷும பஞ்சாக்ஷரமாகிய "சிவாயநம" வென்பது 'ஒருதலை மாணிக்க,மென்றும், காரண பஞ்சாக்ஷரமாகிய "சிவயசிவ" வென்பது 'இருதலை மாணிக்க'மென்றும்' மஹா மனுவாகிய "சி" யென்பது 'ஏாபோட்டி மந்திர, மென்றும், முத்தி பஞ்சாக்கரமென்றும், பெரியோர் பரிபாஷையாகக் கூறுவர்.

இவற்றில் ஸ்தூல பஞ்சாக்கரமாகிய "ந, ம, சி, வா, ய" வென்பது பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு இம்மை, மறுமைகளைப் பயப்பதாகும். இது,

"நம்முதலா யோதிலரு ளூடாது நாடுமருள்
சிம்முதலா யோது நீசென்று."

என்னும் பிரமாணத்தால் நன்கு விளங்குகின்றது. அன்றியும,

"அண்ணல் முதலா யழகா ரெழுத்தைந்து
மெண்ணி யிராப்பக லற்றின்பத்தே—நண்ணி
யருளா னதுசிவத்தே யாக்கு மணுவை
யிருளா னதுதீர வின்று."

"சிவ," முதலாகி, யழகுபொருந்திய பஞ்சாக்கரமைந்தும், இடைவிடா துச்சரிக்கில், சகல கேவலங்களற்ற பேராநந்தத்தில், ஆன்மாக்களிடத்தில் தோற்றும்படியான ஆணவமானது நீங்க, அருட்சத்தியானது, (ஆத்மாக்களை) பொருத்திவிக்கு மென்று ஆன்றோர் கூறியுள்ளார். ஆதலின் சூக்கும பஞ்சாக்கரமே பிறப்பாகிய பெருநோயை நீக்கவல்ல மந்திர மென்றேற் படுகின்றது. தூல பஞ்சாக்கரத்திற்குப் பந்த பஞ்சாக்ஷரமெனும் பெயர் ஆகமங்களில் காணப்படுகின்றது.

குறிப்பு :—பஞ்சாக்கரத்தில், சிகாரம், சிவம்; வகாரம் அருள்; யகாரம் ஆன்மா; நகாரம் திரோதம்; மகாரம் மலம் என்று அறிக.

## பஞ்சாக்கர அர்த்த விசாரம்.

"சிவாயநம".—(சிவாய - ஸகல, நிஷ்களவடிவமான சச்சிதா நந்த பிரம்மத்தின் பொருட்டு, நம, (சிவனது) வணக்கம்.) "சிவத்தின் பொருட்டு நமஸ்காரம்" என்பது பஞ்சாக்கரத்தின் பொருளாம்.

சிவத்திற்கு, ஆன்மா (ஜீவன்) தேகாபேக்ஷையால் தாஸனெனவும், சேதனுபேக்ஷையால் அச்சிவத்தைத் தவிர வேறல்ல வெனவும் உபநிஷத்துக்களில் பிரதிபாதிக்கப்பட் டிருக்கின்றன.

ஆதலின், ஈண்டு (வியாவகாரிக தசையில்) "சிவன்போருட்டு நமஸ்காரம்" என்பது பொருந்தும். ஆனுல், பாரமார்த்திக தசையிலோ "நமஸ்கார" மென்பதன்பொருள் சிவ ஜீவ அபேத பாவனேயேயாம். இதற்குப் பிரமாணமாவது.

"தயங்குநம சத்தநமக் காரத்திற் குற்றவா
சகமா மிச் சொற்
பயங்குலவு மருத்தந்தான் வணங்குகிறதென் றுரைக்கப்
படுமற் றிந்த
நயங்குலவு வணக்கம்யா தெனின்மாயை யாற்பேத
நடைய ராகி
யியங்குறுசீ வர்கள்சிவனே டபேதபா வனேசெய்வ
தென்பர் தக்கோர்."

என்பதாம். மேலும்.

"நமஃஶப்3 த3ஸ்து ஜீவாத்மா
ஶிவஶப்3 த3ஸ்து பராத்மா।
ஆயேதி தாதா3த்ம்யம் ப்ரோக்தம்
நமஃஶிவாயேதி மஹாவாக்யகம் ஸ்மிர்தம்॥

(இதன் பொருள்)-"நம" வென்னும் பதம் ஜீவான்மாவையும், "சிவ" யென்னும் பதம், பரமான்மாவையும், "ஆய" வென்னும்

பதம் ஐக்கியத்தையும் பொருளாக வுடையனவாம். ஆதலின், "சிவாயநம" வென்பது சாந்தோக்கிய உபநிடதத்தின் முடிபாகிய "தத்துவமஸி" யென்னும் மஹாவாக்கியத்தைப்போல, ஜீவப் பிரம்மைக்கியங் கூறும் மகாவாக்கியமேயாம்.

இதனை விளக்கமாய் அறிய விரும்புபவர் உபதேச வாயிலாக அறிவதே முறையாம். ஆதலின் ஈண்டு இவ்வளவோடு நிறுத்தப் பட்டது.

### பஞ்சாக்ஷர ஜெபவிதி.

ஆசாரியன் மூலமாய் அர்த்தத்தைத் தெரிந்துகொண்டு அவருடைய அநுமதி பெற்று, ஸ்நானஞ் செய்து, விபூதிதரித்து, உருத்திராக்ஷமணிந்து, மலையுச்சி, நதிக்கரை, சமுத்திரக்கரை, சிவாலயம், வனம், பூந்தோட்டம், அல்லது நிர்ப்பயமான சுத்த தேசத்தில் கிழக்கு அல்லது வடக்கு முகமாய்ச் சுகாஸனத்தில் உட்கார்ந்து முதலில் மூன்று *பிராணயாமஞ் செய்து இம்மந்திரத்தின் ரிஷி, சந்தஸ், தேவதை, சக்தி, பீஜம், இவைகளை மனதில் தியானித்து, அங்கநியாஸ, கரநியாஸஞ் செய்து, குருவை ஸ்மரித்து, நமஸ்காரஞ் செய்து, பின்னர் தனது ஹிருதய கமலத்தின் மத்தியில் சூரிய, சந்திர, அக்கினி மண்டலத்தில் மின்னல் கொடிபோலப் பிரகாசமாயும், அக்கினி ரூபமாயும், மங்களமாயு மிருக்கிற சிவத்தைத் தியானித்துச் சஞ்சலமற்ற மனதுடன் பஞ்சாக்ஷரத்தை ஜெபஞ் செய்யவும்.

### பஞ்சாக்ஷர ஜெபத்தின் பயன்.

இங்ஙனம் விசுவாசத்தோடு இடைவிடாமல் தியானித்துவரின், ஸ்ரீநடராஜமூர்த்தியின், மனோகாய நடன சேவை (தியானம்)

---

* பிராணயாமமாவது பிராணவாயுவைத் தடுத்தல்; இது இரேசக, பூரக, கும்பகமென மூவ்வகைப்படும். இரேசக மென்பது மூச்சைவிடுதல்; பூரகம், வாயுவை யுட்கொள்ளுதல்; கும்பகம் வாயுவை நிறுத்தல்.

சித்திப்பதன் மூலமாய்ச் சிதாகாய நடன சேவையாகிய சிவயோக நிஷ்டை (ஸமாதி) சித்திக்கின்ற தென்பது சுருதிப் பிரசித்தமாம். அன்றியும்,

" அஞ்செழுத்தே யாகமமு மண்ண லருமறையு
மஞ்செழுத்தே யாதிபுரா ணம்மனைத்து—மஞ்செழுத்தே
யாநந்த தாண்டவமும் யாவைக்கு மப்பாலா
மோனந்த மாமுத்தி யும்.

உரையுணர்வுக் கெட்டா வொருவன் மிருபஞ்சாக்
கரத்தால் வரைமகடான் பாதி—பரையிடமாய்க்
காணும்படியே கருணை யுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு."

என்று மனவாசகங் கடந்தார் திருவாய்மலர்ந்தருளிய உண்மை விளக்கங் கூறுவது நன்குணர்தற்பாலதாம்.

இங்ஙனம் விபூதி, உருத்திராக்ஷம், பஞ்சாக்ஷரம் முதலிய சிவசின்னங்களின் ஸ்வரூபம், பாகுபாடுகள், தாரணவிதி, ஜபவிதி, தத்துவம் முதலியன சுருக்கமாகக் கூறப்பட்டன. இவற்றை நுண்ணுணர்வால் நன்காராய்ந்து விபூதி, உருத்திராக்ஷ, பஞ்சாக்ஷரங்கள் ஸ்ரீநடராஜமூர்த்தியேயாமென்று சந்தேக விபரீதமறத் தெளிந்து சிதாகாய நடனமாஞ் சமாதியைப் பெற்று, இன்புருவானவரே இனிப் பிறவா நிலையை யடைவரென்க.

"மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தானந்த மானிடத்தே தங்கியிடு—மாநந்த
மொண்டருந்தி நின்றாடல் காணுமருண் மூர்த்தியதாய்க்
கொண்டதிரு வம்பலத்தான் கூத்து."

" யகார மிலிங்கமா நாளம் வகாரஞ்
சிகார மேற்பீடந் தெரிக்கின்—மகாரந்தான்
கண்டமே யாகுங் கவிஞரடிப் பீடம்
பண்டிகழு நஃகாரமே பார்."

“ நானேயோ தவஞ் செய்தேன்
சிவாயநம வெனப் பெற்றேன் ”

“ தெள்ளமு தூறச் சிவாய நமவென்று
வுள்ளமு தூற வொருக்கா லுரைத்திடும் ”

“ சிவசிவ வென்கிலர் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளும்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவர்
சிவசிவ வென்னச் சிவகதி தானே. ”

“ நாயோட்டு மந்திரம் நான்மறை வேதம்
நாயோட்டு மந்திரம் நாதனி ருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்த சோதி
நாயோட்டு மந்திரம் நாமறியோமே. ”

“ நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. ”

‘ கருப்பயோனியிற் சுழிப்படு பவக்கடல் கடப்பப்
பொருப்பினெம் பிரானுயிர்க்கெலாம் புணையெனப் புகன்ற
விருப்பஞான வஞ்செழுத்தினை யுளத்திடை வித்திற்
றருப்பைசுட்டிடும் வேள்வியேன் றூனமேன் றவமேன். ”

என்னும், பஞ்சாக்ஷர மகிமையைப்பற்றிய ஆன்றோர்வாக்கியங்கள் கண்டு நன்குணர்தற் பாலனவாம்.

ஸ்ரீ நடராஜ தத்துவம்
முற்றிற்று.

---

## ஸ்ரீ நடராஜமூர்த்தி அபிஷேக

# பூஜா - உற்சவ விதி.

---

𑌨𑌟𑌰𑌾𑌜 𑌅𑌭𑌿𑌷𑍇𑌕 𑌕𑌾𑌲𑌂

𑌶𑍍𑌲𑍋𑌕𑌂

𑌧𑌨𑍁𑌰𑍍𑌮𑌾𑌸𑍇    𑌕𑍃𑌤𑍍𑌵𑌾    𑌆𑌰𑍍𑌦𑍍𑌰𑌾
𑌷𑍋𑌡𑌶𑍈𑌸𑍍𑌸𑌂𑌯𑍁𑌤𑌂 𑌅𑌪𑌰𑌾𑌤𑍍𑌰𑍇𑌽𑌭𑌿𑌷𑍇𑌕𑌂 𑌤𑍁
𑌹𑌾𑌟𑌕𑌾𑌨𑍍𑌤𑌜𑌲𑍈𑌃 ‖ 1.

மார்கழித் திருவாதிரையில் நடராஜமூர்த்தி
அபிஷேக பூஜா உற்சவ விதி.

| | | |
|---|---|---|
| 1. | பார்த்தியத் திரவியம் | விளாமிச்சம் வேர். |
| 2. | ஆசமனத் திரவியம் | துளசி |
| 3. | அர்க்யத் திரவியம் | அக்ஷதை |
| 4. | அபிஷேகத் திரவியம் | சூர்யகாந்தம், சந்திரகாந்தம், ஊசிகாந்தம் |
| 5. | வஸ்திரம் | வெண்பட்டு |
| 6. | சந்தனத் திரவியம் | விளாமிச்சம்வேர்; குங்குமப்பூ; பச்சைக் கர்ப்பூரம் |
| 7. | ஆபரணம் | தங்கமணிகள் |
| 8. | புஷ்பம் | வெள்ளறுகு, வெண்தாமரை, தும்பை நந்தியாவர்த்தம், கொக்குமந்தாரை |
| 9. | தூபத்திரவியம் | அகில், கர்ப்பூரம் |
| 10. | தீபசங்கியை | 80 |
| 11. | மந்த்ரான்னம் | வெண்பொங்கல் |
| 12. | கறியமுது | மாவடு, கொம்புப்பாகல் |
| 13. | பாநீயம் | குங்குமப்பூ, ஏலக்காய், நீலோற்பலம் |

| | |
|---|---|
| 14. முகவாசம் | கிராம்பு |
| 15. ராகம் | காந்தாரம் |
| 16. வாத்தியம் | பேரி |
| 17. தாளம் | மட்டியம் |
| 18. தீர்த்தம் | வைஷ்ணவம் |
| 19. தேவதா மந்த்ரம் | த்ரியம்பகம் |
| 20. பத்ரம் | வெள்ளறுகு |
| 21. மண்டலம் | 45 பத்ரங்கள் |
| 22. பஞ்சவில்வம் | கிளுவை, நொச்சி, விளா, வில்வம் கோங்கு |
| 23. ஓமகுண்டம் | பஞ்சகோணம் |
| 24. இத்மம் | இலுப்பை |
| 25. சமித்து | வில்வம் |
| 26. ஆகுதி | 16 |
| 27. முக்காலி | அரசு |
| 28. ப்ரதானத் திரவியம் | நெய் |
| 29. பாக்கு | 16 |
| 30. வெற்றிலை | 48 |
| 31. நிவேதனம் | வெற்றன்னம் |
| 32. ஆராதனம் | சோடசோபசாரம் |

33. வேதபாராயணம்
34. தேவாரபாராயணம்
35. ஸர்வ வாத்யம்
36. தரிசனம், உற்சவம்
37. தானம்—ஸ்வர்ணம்.
38. பலன்—சந்தானம், பூரண ஆயுள்.

𑌨𑌟𑌰𑌾𑌜 𑌅𑌭𑌿𑌷𑌕 𑌕𑌾𑌲𑌃

𑌶𑍍𑌲𑍋𑌕𑌂

𑌕𑍁𑌂𑌭𑌮𑌾𑌸𑍇 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍍𑌯𑌾𑌂 𑌨𑌟𑍇𑌶𑌸𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌤
𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌶𑌿𑌵𑌾𑌯 𑌅𑌭𑌿𑌷𑌕𑌂 𑌤𑍁 𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑍇
𑌸𑌾𑌯 𑌪𑍍𑌰𑌦𑍋𑌷𑌕𑍇 ‖ 2.

## மாசி சுக்லபக்ஷ சதுர்த்தசியில் நடராஜ மூர்த்தி அபிஷேக பூஜா விதி.

| | | |
|---|---|---|
| 1. | பாத்யத்திரவியம் | வெள்ளறுகு |
| 2. | ஆசமனத்திரவியம் | மல்லிகைப் புஷ்பம் |
| 3. | அர்க்கியத் திரவியம் | வெண் கடுகு |
| 4. | அபிஷேகத் திரவியம் | நாவற்பட்டை பாதிரிப்பட்டை கல்லாம்பட்டை பிலாப்பட்டை அத்திப்பட்டை அரசன்பட்டை இலுப்பைப் பட்டை |
| 5. | வஸ்திரம் | மஞ்சள் பட்டு |
| 6. | சந்தனத் திரவியம் | கோஷ்டம் |
| 7. | ஆபரணம் | வைரமணி |
| 8. | புஷ்பம் | மல்லிகை முல்லை இருவாக்ஷி மருதாணி நுணு |
| 9. | தூபத்ரவியம் | பச்சைக் காப்பூரம் சாம்பிராணி |
| 10. | தீபசங்கியை | 108 |
| 11. | மந்த்ரான்னம் | பாயசம் |
| 12. | கறியமுது | மாங்காய் |
| 13. | பாநீயம் | தவனம், மறு, குங்குமப்பூ, ஏலக்காய், பாநீயம் வாசனை கட்டவும் |
| 14. | முகவாசம் | ஜாபத்ரி |
| 15. | ராகம் | தக்கராகம் |
| 16. | வாத்தியம் | மல்லரி |
| 17. | தாளம் | ரூபகம் |
| 18. | நிர்த்தம | ப்ரத்தியாலீடம் |
| 19. | தேவதாமந்தரம் | விஸ்வரூபம் |
| 20. | பத்ரம் | வெண்துளசி |
| 21. | மண்டலம் | சதுர் ஸ்ரூப்த்ரம் |
| 22. | வில்வம் | அறுகு, நொச்சி, நாயுருவி, சிறுவிளா, வில்வம் |
| 23. | குண்டம் | ஷட்கோணம் |
| 24. | இத்மம் | இலுப்பை |
| 25. | சமித்து | அரசு |
| 26. | ஆகுதி | 50 |
| 27. | முக்காவி | கல்லாலமரம் |

28. பிரதானத் திரவியம் பசுநெய், பச்சைக்கர்ப்பூரம், மஞ்சள்பொடி
29. பாக்கு 12
30. வெற்றிலை 48
31. மகாநிவேதனம் வெற்றன்னம்
32. ஆராதனம் சோடசோபசாரம்
33. வேதபாராயணம்
34. தேவாரபாராயணம்
35. ஸர்வ வாத்யம்
36. தரிசனம்
37. கம்பள தானம்
38. பலன்—ஐஸ்வர்யம்.

## நடராஜ அபிஷேக காலம்

### ஶ்லோகம்

சைத்ரே சவைஶாகே த்ருவ்யம் உஷ ஶ்ரவண
நக்ஷத்ரே ஶிவாய அபிஷேகம் ஜ்யேஷ்டஶ்ரயெஸ் ஸர்வ
ரக்ஷகே. 3.

## சித்திரைத் திருவோணத்தன்று நடராஜ மூர்த்தி அபிஷேக பூஜா விதி.

1. பாத்தியத் திரவியம் வெண் கடுகு
2. ஆசமனத் திரவியம் வாழைப்பழம்
3. அர்க்யத் திரவியம் பச்சைக் கர்ப்பூரம்
4. திருமஞ்சனத்திரவியம் பாதிரி, பாரிஜாதம், வெண் மிளகு
5. வஸ்திரம் ஊதாபட்டு
6. சந்தனத் திரவியம் பச்சைக் கர்ப்பூரம், குங்குமப்பூ, கஸ்தூரி
7. ஆபரணம் கோமேதகம்
8. புஷ்பம் ஜாதிப்பூ கடப்பம்பூ மகிழம்பூ
9. தூப த்ரவியம் சாம்பிராணி, மட்டிப்பால், சந்தனம்
10. தீபசங்கியை 200

| | |
|---|---|
| 11. மந்த்ரான்னம் | தேங்காய்ச் சாதம் |
| 12. கறியமுது | வழுதுணங்காய், மாங்காய் |
| 13. பாநீயம் | ஓடும்ஜலம் செண்பக மொட்டு, ஏலக்காய் வாசனை கட்டவும் |
| 14. முகவாசம் | ரோஜா மொட்டு |
| 15. ராகம் | கொல்லி |
| 16. வாத்தியம் | படகம் |
| 17. தாளம் | துருவம் |
| 18. நிர்த்தம் | லலிதம் |
| 19. தேவதாமந்த்ரம் | மிருடானி |
| 20. பத்ரம் | கோங்கு |
| 21. மண்டலம் | ஸ்ரீநிவாசம் |
| 22. வில்வம் | நுணா, நொச்சி, கிளுவை, மாங்கொழுந்து, வில்வம் |
| 23. குண்டம் | சதுர்முகம் |
| 24. இத்மம் | சந்தனக் கட்டை |
| 25. சமித்து | கோங்கு |
| 26. ஆகுதி | 32 |
| 27. பிரதானத்ரவியம் | கதம்பம் பலவித புஷ்பங்கள் |
| 28. முக்காலி | ஆலம் விழுது |
| 29. வெற்றிலை | 64 |
| 30. பாக்கு | 12 |
| 31. நிவேதனம் | வெற்றன்னம் |

32. சோடசோபசாரம்
33. வேதபாராயணம்
34. தேவாரபாராயணம்
35. ஸர்வ வாத்தியம்
36. தரிசனம்
37. தானம்—குடம் (வெல்லம்)
38. பலம்—பக்தி, ஸ்ரீகரம்

𑌨𑌟𑌰𑌾𑌜𑌾𑌭𑌿𑌷𑍇𑌕 𑌕𑌾𑌲𑌃

𑌶𑍍𑌲𑍋𑌕𑌃

𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌾𑌸𑍇𑌷𑍁 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰
𑌸𑌂𑌯𑍁𑌤𑌂 𑌨𑌯𑌨𑌾𑌤𑍍𑌰𑌾𑌭𑌿𑌷𑍇𑌕𑌂𑌚 𑌸𑍁𑌹𑌾𑌤𑌕𑍍𑌤
𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 ‖ 4.

ஆனியுத்தரத்தன்று ஸ்ரீநடராஜ மூர்த்தி
அபிஷேக பூஜா உற்சவவிதி.

| | | |
|---|---|---|
| 1. | பாத்தியத் திரவியம் | பச்சைக் கர்ப்பூரம் |
| 2. | ஆசமனத் திரவியம் | குங்குமப்பூ |
| 3. | அர்க்கிய திரவியம் | எள்ளு |
| 4. | திருமஞ்சனத் திரவியம் | கருவூமத்தம்பூ, புன்னைப்பூ ஒற்றை நந்தியாவர்த்தம்பூ, வெள்ளெருக்கம்பூ ரோஜாப்பூ. |
| 5. | வஸ்திரம் | பச்சைப்பட்டு |
| 6. | சந்தனத் திரவியம் | கோரோஜனம் |
| 7. | ஆபரணம் | புஷ்பராகம் |
| 8. | புஷ்பம் | கடப்பம்பூ, சண்பகம், செந்தாமரை |
| 9. | தூபத்திரவியம் | சந்தனம், பால்சாம்பிராணி |
| 10. | தீபசங்கியை | 42 |
| 11. | மந்த்ரான்னம் | மிளகு சம்பா |
| 12. | கறியமுது | பலாக்காய் |
| 13. | பானீயம் | தங்கரேக்கு, சந்தனம், ஏலக்காய், குங்குமப்பூ ரோஜாப்பூ |
| 14. | முகவாசம் | ஜாதிக்காய், பச்சைக் கர்ப்பூரம் |
| 15. | ராகம் | இந்தளம் |
| 16. | வாத்தியம் | முரவம் |
| 17. | தாளம் | உத்காதம் |
| 18. | நிர்த்தம் | ஆநந்த தாண்டவம் |

| | |
|---|---|
| 19. தேவதாமந்த்ரம் | சூலாயுதம் |
| 20. பத்ரம் | மகாவில்வம் |
| 21. மண்டலம் | மஞ்சுளம் |
| 22. வில்வம் | கிளுவை, வெள்ளறுகு, மாசிபத்ரம், விபூதிப்பச்சை, மகாவில்வம் |
| 23. குண்டம் | விர்த்தம் (வட்டம்) |
| 24. இத்மம் | நுணா |
| 25. சமித்து | மகாவில்வம் |
| 26. ஆகுதி | பதினாறு |
| 27. முக்காலி | சண்பகம் |
| 28. பிரதானத்திரவியம் | பூவன்பழம், பலாப்பழம், மாம்பழம் |
| 29. வெற்றிலை | 40 |
| 30. பாக்கு | 12 |
| 31. நிவேதனம் | வெற்றன்னம் |

32. ஷோடசோபசாரம்
33. வேதபாராயணம்
34. தேவார பாராயணம்
35. ஸர்வ வாத்தியம்
36. தரிசனம், உற்சவம்
37. தானம்—திலம் (எள்ளு)
38. பலம்—காரியசித்தி, மோக்ஷம்

𑌨𑌟𑌰𑌾𑌜𑌾𑌭𑌿𑌷𑍇𑌕 𑌕𑌾𑌲𑌃

𑌶𑍍𑌲𑍋𑌕𑌂

𑌶𑍍𑌰𑌾𑌵𑌣𑍍𑌯𑌾𑌂 𑌶𑍁𑌕𑍍𑌲𑌪𑌕𑍍𑌷𑍇 𑌤𑍁 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍍𑌯𑌾𑌂
𑌨𑌟𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌶𑌿𑌵𑌾𑌯𑌾 𑌅𑌭𑌿𑌷𑍇𑌕𑌂 𑌤𑍁 𑌦𑌶𑍍𑌯𑌯𑍇𑌤𑍍
𑌸𑌾𑌯𑌰𑌕𑍍𑌷𑌕𑍇 ॥ 5.

## ஆவணி சுக்லபக்ஷ சதுர்த்தசியில்
## ஸ்ரீ நடராஜ மூர்த்தி அபிஷேக பூஜா விதி

| | | |
|---|---|---|
| 1. | பாத்தியத் திரவியம் | கஸ்தூரி. |
| 2. | ஆசமனத் திரவியம் | கிராம்பு. |
| 3. | அர்க்யத் திரவியம் | புஷ்பம் தர்ப்பைநுனி. |
| 4. | திருமஞ்சனத்திரவியம் | (கெம்பு நீலம் முத்து பவழம் பச்சை) |
| 5. | வஸ்திரம் | சாம்பல் நிறப்பட்டு. |
| 6. | சந்தனத் திரவியம் | புனுகு |
| 7. | ஆபரணம் | கோமேதகமணி. |
| 8. | புஷ்பம் | (மல்லிகை, முல்லை, சண்பகம், புன்னை, இருவாக்ஷி.) |
| 9. | தூபத்திரவியம் | கோஷ்டம் விளாமிச்சம் வேர். |
| 10. | தீபசங்கியை | 22 |
| 11. | மந்திரான்னம் | கோதுமைப் பாயசம். |
| 12. | கறியமுது | பச்சைச் சுண்டைக்காய். |
| 13. | பாநீயம் | பன்னீர். |
| 14. | முகவாசம் | குங்குமப்பூ. |
| 15. | ராகம் | தக்கேசி. |
| 16. | வாத்தியம் | டக்கரி. |
| 17. | தாளம் | ஜர்ஜரி. |
| 18. | நிர்த்தம் | ஸ்வாலீடம். |
| 19. | தேவதா மந்திரம் | அநாதீசம். |
| 20. | பத்ரம் | விஷ்ணுக்ராந்தம். |
| 21. | மண்டலம் | ஸர்வதோ பத்ரம். |
| 22. | வில்வம் | அத்தி, ஆல், நுணு, விளா, நொச்சி. |
| 23. | குண்டம் | திக் தளம். (8 இதழ்) |
| 24. | இத்மம் | வாகை |
| 25. | சமித்து | நாயுருவி |
| 26. | ஆகுதி | 108 |
| 27. | முக்காலி | மாமரம் |

28. பிரதானத் திரவியம் நாட்டுச்சர்க்கரை
29. வெற்றிலை 60
30. பாக்கு 12
31. நிவேதனம் வெற்றன்னம்
32. சோடசோபசாரம்
33. வேதபாராயணம்
34. தேவாரபாராயணம்
35. ஸர்வ வாத்தியம்
36. தரிசனம்
37. வஸ்திரதானம்
38. இம்மை மறுமை—பலன்.

நடராஜ அபிஷேக காலः

ஶ்லோகம்

கந்யார்கேஷு ஶுக்ல சதுர்தஶ்யாம்
நடேஶஸ்ய ஶிவாயா அபிஷேகஞ்சதுர்தஶ்யாம்
ஸாயரக்ஷகே ॥ 6.

புரட்டாசி சுக்லபக்ஷ சதுர்த்தசியில்
ஸ்ரீ நடராஜ மூர்த்தி அபிஷேக பூஜா விதி.

1. பாத்தியத் திரவியம் தக்கோலம்
2. ஆசமனத் திரவியம் நாகசேசரம்
3. அர்க்கியத் திரவியம் சந்தனம்
4. திருமஞ்சனத்திரவியம் அஞ்சனக்கல், கோரோசனம்
5. வஸ்திரம் சிகப்புப்பட்டு
6. சந்தனத்திரவியம் சாம்பிராணி தைலம், குங்குமப்பூ
7. ஆபரணம் கெம்புகள்
8. புஷ்பம் (செங்கழுநீர், சிகப்பு மந்தாரை, செந்தாமரை, சிகப்புப் பாதிரி, ரோஜாப்பூ
9. தூபத்திரவியம் சந்தனம், அகில், மட்டிப்பால்
10. தீபசங்கியை 32

| | |
|---|---|
| 11. மந்திரான்னம் | பயத்தம்பருப்புப் பாயசம் |
| 12. நறியமுது | நார்த்தங்காய் |
| 13. பாநீயம் | ரோஜா, சண்பகம், வாசனைகட்ட |
| 14. முகவாசம் | ஜவ்வாது |
| 15. ராகம் | நட்டபாடை |
| 16. வாத்தியம் | ரதிகம் |
| 17. தாளம் | சிம்மநந்தனம் |
| 18. நிர்த்தம் | புஜங்கம் |
| 19. தேவதா மந்திரம் | தேவ தேவ |
| 20. பத்ரம் | சிகப்பு சண்பகம் |
| 21. மண்டலம் | ருத்திரகாந்தம் |
| 22. வில்வம் | நாயுருவி, நொச்சி, அறுகு, விளா, வில்வம் |
| 23. குண்டம் | யோனி |
| 24. இத்துமம் | சண்பகம் |
| 25. சமித்து | மகிழம் |
| 26. ஆகுதி | 200 |
| 27. முக்காலி | பாதிரி |
| 28. பிரதானத்திரவியம் | (கரும்பு, நெல்பொரி, எள்ளுருண்டை, தேங்குழல், பிட்டு, வடை) |
| 29. வெற்றிலை | 108 |
| 30. பாக்கு | 32 |

31. நிவேதனம்—வெற்றன்னம்
32. சோடசோபசாரம்
33. வேதபாராயணம்
34. தேவார பாராயணம்
35. ஸர்வ வாத்தியம்
36. தரிசனம்
37. தானம்—தான்னியம்
38. பலம்—தனப்பிராப்தி.

---

## திருவேட்டீச்சுரத்தில்
## இலக்குமி பூசித்துப் பெருவாழ் வடைந்த
# வரலாற்றுச் சருக்கம்.

---

என்று சூதமா முனிவர னிசைப்பமா தவத்தோர்
நன்று நீயினித் திருமகள் பெருமண மெய்த
வொன்று மன்பினு லேத்திய வாறருள் கென்றூர்
மன்று ளாடியை வணங்கியம் முனிவ னுரைப்பான்.

முன்னொரு காலத்தில் தேவர்களும் அசுரர்களுஞ் சேர்ந்து திருப்பாற் கடலைக் கடைந்தபோது, அதனின்றும் ஆலகால விஷம் கற்பக விருக்ஷம், சிந்தாமணி, ஐராவதம், சந்திரன், இலக்குமி, அகலிகை, அமிர்தம் முதலியன பிறந்தன. இவற்றுள் முக்கியப் பயனுகிய அமுதத்தை முன்னிட்டுத் தேவர்களுக்கும்அசுரர்களுக்குங்கலகமுண்டாயிற்று. அப்போது மகாவிஷ்ணு, மூவுலகங்களையும் மயங்கச் செய்யும் பேரெழிலுடைய வொரு மோகினி வுருக்கொண்டு நிற்க, அசுரர்கள், அம்மோகினியின் உருவத்தைக் கண்டு மயங்கிக் கிடந்தனர். அச்சமயத்தில் திருமால் அவ்வமுதத்தைத் தேவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்துவிட்டனர். ஆண்டெழுந் தருளியிருந்த பரமசிவம் திருமால் கொண்ட மோகினி வுருவத்தின் எழிலைக் கண்டு, அவரை யணைக்கத் திருவுளங் கொண்டனர். உடனே மோகினியும், பரமசிவனும் திருப்பாற் கடலுக் கருகே, நாவலந் தீவில், ஓர் பொழிலுக்குள் சென்று, கலந்து அரிகர புத்திரனைப் பெற்றனர்.

இஃதிங்ஙன மிருக்க, மகாவிஷ்ணுவையே மணம்புரிய வேண்டுமென்னு மிச்சை கொண்ட இலக்குமி, ஆண்டுத் திருமாலைக்காணுது திகைத்து நிற்க, இதைக் குறிப்பாய் அறிந்த சுரகுருவாகிய பிரகஸ்

பதி, நடந்த வரலாற்றை நன்கு கூறிப் பரமசிவத்தைக் குறித்துத் தவஞ் செய்யுமாறு இலக்குமிக் குரைத்தனர். உடனே இலக்குமியும் தவஞ் செய்தற்குரிய திருத்தலம் யாதென்று அவரை வினவப் பிரகஸ்பதி, "ஓஇலக்குமியே!நான் சொல்வதைச் சாவதானமாய்க்கேள். நீர்வளமு நிலவளமு முடைய பரதகண்டத்தில், தக்ஷிண பாரிசத்தில் 'தொண்டை மண்டல' மென்னும் பெயருள்ள ஓர் நாடுளது. அதில்,

எங்கணுஞ் சிவதல மெங்குந் தீர்த்தங்க
ளெங்கணும் வேள்விக ளெங்கும் பாவலர்
எங்கணுந் தருமமீ டெங்கு மேவலா
லெங்கணு மிதற்கிணை நாடொன் றில்லையே.

இன்னவான பல்பளங்களு மியைந்தவந் நாட்டிற்
பன்னலங்களும் புலமையும் பழிப்பிலா வொழுக்கும்
மன்னுசான் றவர்வாணக ரொன்றுள திதற்குப்
பொன்னிகே ணிகராவதிப் புவியினி லில்லை.

இத்தகையதோர் திருத்தலமானது திருமயிலை, திருவொற்றியூர் என்னுந் திருத்தலங்களுக் கிடையே பிரகாசிக்கின்றது. அது சண்பக விருக்ஷங்க ளடர்ந்த காட்டகத்தே விளங்குவதாகும். முன் கற்பத்தில் சமுத்திரராஜன், வேதங்கள், ஸரஸ்வதி முதலியோர் ஆண்டுத் தவஞ் செய்துப் பெருவாழ் வடைந்தனர்.

அத்திருத் தலத்தின் சீரை யாவரே வுரைக்க வல்லார்
உத்தம குணங்கள் யாவு மோருரு வான மாதே
சித்தர் சாரண ரியக்கர் தேன்பிழி மகத நல்யாழ்
வித்தகர் கருடர் விச்சா தாருமத் தலம் விழைப்பார்.

மேலும், அத் திருத்தலத்தில் பேசப்படும் வார்த்தைகளெல்லாம் வேத மந்திரங்களே யாகும். எண்ணும் எண்ணங்கள் யாவும் சிறந்த நிஷ்டையேயாம். அத்திருத்தலத்திற் செய்த அணுவாகிய புண்ணியமும் மகத்தாய் விளங்கும்.

இன்னுங் கேள்.

பல்வகைத் தவமங்காற்றின் பயனுடனளிக்கு மாங்கே
பல்வகைத் தானபூசை பவனிலை சென்று தேய்க்கும்
பல்வகைத்தான மெல்லாம் பயந்து விண்வாழ் வளிக்கும்
பல்வகை வினைமுன் செய்த பவங்களு நீங்குமன்றே.

இத்தகைய மகிமைவாய்ந்த அத்தலத்திற்குச் சண்பகவனம் வித்தியா நகரம் என்னு மிரண்டு திருநாமங்களுண்டு. அத்தலத் திற்குச் சென்று, ஆங்குள்ள தீர்த்தத்தில் படிந்து, சண்பகவிருக்ஷ மூலத்தில் எழுந்தருளி யிருக்கும் சுயம்புலிங்கத்தை விதிப்படி பூசித்துத் தவ மியற்றுவாயாக. உடனே கைலாஸபதி உனக்கருள் புரிவர்'' என்று திருவாய்மலர்ந் தருளினர்.

இதைக் கேட்ட திருமகள், உடனே சுரகுருவினிடத்தில் விடைபெற்றுச் சண்பகவனஞ் சென்று, ஆங்குள்ள திவ்விய அலங் கார வைபவங்களைக் கண்டு பரமானந்த மடைந்து, தாமரை, அல்லி, குமுதம் முதலிய பல புஷ்பங்கள் நிறைந்து அன்னப்பக்ஷிகள் அங்கும் இங்கும் உலாவுஞ் சிறப்பினைப் பெற்ற ஓர் தீர்த்தத்தை யடைந்து அதில் நீராடித் திருக்கோயிலை யடைந்து சிவபெருமா னுக்குப் பூசைகளை விதிப்படிச் செய்து முடித்து, எதிர் நின்று பல வாறு தோத்திரஞ் செய்து, அச்சண்பகவனத்திலேயே ஒரு ஆச்சிர மம் வகுத்துக்கொண்டு ஆண்டுத் தவ மியற்றினள்.

இங்ஙனம், திருமகள் ஓராண்டு தவஞ்செய்ய, அத்தவத்திற் கிரங்கி, கருணைக்கடலாங் கங்காதரன் விரைந்து வெள்விடைமேற் பிரசன்னமாயினர்.

எந்தை யாம் பரமசிவம் எதிர் தோன்றலும், திருமகள், உடல் பூரித்து விழிப்புனல் சொரியப்பலவாறு தோத்திரஞ்செய்து மெய்ம்மறந்து நின்றனள்.

உடனே உமாபதியாகிய பரமேஸ்வரன், பெருங் கருணையினால் கிருபா நோக்கம் புரிந்து ஓ இலக்குமியே! நீ இயற்றிய பெருக்

தவத்தால் யாம் மிக மகிழ்ந்தோம். விரும்பிய வரத்தினைக் கேட்பாயாக வென்று பணித்தனர்.

பரமசிவம் பணித்தருளியதைக் கேட்டு இலக்குமி உடனே ஹே தேவ தேவனே ! மன்மறிமாத நினைப்பு முண்டோ ? ஆயினும் கட்டளைப்படி வேண்டுகின்றேன். அடியேன் திருமாலை மணம் புரியும்படி யருள்புரிய வேண்டும். அன்றியும் இனி இத்திருத்தலமானது அடியேன் பூசித்துத் திருவருள் பெற்ற காரணத்தால் "திருவேட்ட புரம்" என்று வழங்குக. தீர்த்தம் "இலக்குமி தீர்த்த மென்னும்" பெயர் பெறுக. சுக்கிரவாரந்தோறும் உம்மை யன்புடன் பணிபவர்க்கு எல்லா நலங்களு முண்டாகுக. என்று இவ்வாறு வெவ்வேறு வரங்களை விரும்பி யாசித்துத் துதித்து நின்றனள்.

இலக்குமி கேட்ட வரங்களைத் திருச்செவி மடுத்துப் பகவான் மகேச்வரன் மனமகிழ்ந்து ஹே! லக்ஷ்மீ!! நீ விரும்பிக்கேட்ட வரங்களை அங்ஙனமே தந்தோம். நீ மணக்க விரும்பிய திருமால் எனது சக்தியேயாம். நீ அவனை மணப்பாயாக. என்றருளி ஆநந்த மிகுதியால் நிர்த்தஞ்செய்தனர். இந்நாளே அனிஉத்திரமாம். அப்பொழுது ஸகல தேவர்களும் மலர்மாரி சொரிந்தனர். ஆகாயத்தில் தேவ துந்துபி முழங்கிற்று. உடனே திருமாலும் அங்குத் தோன்றி, முன்னர் தாருகாவனத்தில் கண்ட ஆநந்ததாண்டவத்தை மறுபடியுந் தரிசிக்க நேர்ந்ததே யென்னும் பெருமகிழ்ச்சியுடன் ஆநந்த தாண்டவத்தைத் தரிசித்துத் தேவேந்திரன் முதலிய ஸகல தேவர்களும் புடைசூழத்தான் இலக்குமியைத் திருமணம் புரிந்தனர்.

குறிப்பு:—இங்ஙனந் திருவேட்டீச்சுரப் புராணங் கூறுகின்றதை யறிக.

1. சுவாமி திருநாமம்—திருவேட்டநாதர், வித்தியேச்சுரர்.
2. அம்மன் திருநாமம்—சண்பகவல்லி.
3. விநாயகர் திருநாமம்—வல்லபைக்கணேசர்.
4. சுப்பிரமணியர் திருநாமம்—ஞானவேலர்.

---

இன்னுங் கேள்.

பல்வகைத் தவமங்காற்றின் பயனுட னளிக்கு மாங்கே
பல்வகைத் தானபூசை பவஙிலே சென்று தேய்க்கும்
பல்வகைத்தான மெல்லாம் பயந்து விண்வாழ் வளிக்கும்
பல்வகை வினைமுன் செய்த பவங்களு நீங்குமன்றே.

இத்தகைய மகிமைவாய்ந்த அத்தலத்திற்குச் சண்பகவனம் வித்தியா நகரம் என்னு மிரண்டு திருநாமங்களுண்டு. அத்தலத்திற்குச் சென்று, ஆங்குள்ள தீர்த்தத்தில் படிந்து, சண்பகவிருக்ஷ மூலத்தில் எழுந்தருளி யிருக்கும் சுயம்புலிங்கத்தை விதிப்படி பூசித்துத் தவ மியற்றுவாயாக. உடனே கைலாஸபதி உனக்கருள் புரிவர்'' என்று திருவாய்மலர்ந் தருளினர்.

இதைக் கேட்ட திருமகள், உடனே சுரகுருவினிடத்தில் விடைபெற்றுச் சண்பகவனஞ் சென்று, ஆங்குள்ள திவ்விய அலங்கார வைபவங்களைக் கண்டு பரமாநந்த மடைந்து, தாமரை, அல்லி, குமுதம் முதலிய பல புஷ்பங்கள் நிறைந்து அன்னப்பக்ஷிகள் அங்கும் இங்கும் உலாவுஞ் சிறப்பினைப் பெற்ற ஓர் தீர்த்தத்தை யடைந்து அதில் நீராடித் திருக்கோயிலை யடைந்து சிவபெருமானுக்குப் பூசைகளை விதிப்படிச் செய்து முடித்து, எதிர் நின்று பலவாறு தோத்திரஞ் செய்து, அச்சண்பகவனத்திலேயே ஒரு ஆச்சிரமம் வகுத்துக்கொண்டு ஆண்டுத் தவ மியற்றினள்.

இங்ஙனம், திருமகள் ஓராண்டு தவஞ்செய்ய,அத்தவத்திற் கிரங்கி, கருணைக்கடலாங் கங்காதரன் விரைந்து வெள்விடைமேற் பிரசன்னமாயினர்.

எந்தை யாம் பரமசிவம் எதிர் தோன்றலும், திருமகள், உடல் பூரித்து விழிப்புனல் சொரியப்பலவாறு தோத்திரஞ்செய்து மெய்ம்மறந்து நின்றனள்.

உடனே உமாபதியாகிய பரமேஸ்வரன், பெருங் கருணையினல் கிருபா நோக்கம் புரிந்து ஓ இலக்குமியே! நீ இயற்றிய பெருந்

தவத்தால் யாம் மிக மகிழ்ந்தோம். விரும்பிய வரத்தினைக் கேட்பாயாக வென்று பணித்தனர்.

பரமசிவம் பணித்தருளியதைக் கேட்டு இலக்குமி உடனே ஹே தேவ தேவனே! மனமறிமாத நினைப்பு முண்டோ? ஆயினும் கட்டளைப்படி வேண்டுகின்றேன். அடியேன் திருமாலை மணம் புரியும்படி யருள்புரிய வேண்டும். அன்றியும் இனி இத்திருத்தலமானது அடியேன் பூசித்துத் திருவருள் பெற்ற காரணத்தால் "திருவேட்ட புரம்" என்று வழங்குக. தீர்த்தம் "இலக்குமி தீர்த்த மென்னும்" பெயர் பெறுக. சுக்கிரவாரந்தோறும் உம்மை யன்புடன் பணிபவர்க்கு எல்லா நலங்களு முண்டாகுக. என்று இவ்வாறு வெவ்வேறு வரங்களை விரும்பி யாசித்துத் துதித்து நின்றனள்.

இலக்குமி கேட்ட வரங்களைத் திருச்செவி மடுத்துப் பகவான் மகேச்வரன் மனமகிழ்ந்து ஹே! லக்ஷ்மீ!! நீ விரும்பிக்கேட்ட வரங்களை அங்ஙனமே தந்தோம். நீ மணக்க விரும்பிய திருமால் எனது சக்தியேயாம்.நீ அவனை மணப்பாயாக.என்றருளி ஆநந்த மிகுதியால் நிர்த்தஞ்செய்தனர்.இந்நாளே ஆனிஉத்திரமாம்.அப்பொழுது ஸகல தேவர்களும் மலர்மாரி சொரிந்தனர். ஆகாயத்தில் தேவ துந்துபி முழங்கிற்று. உடனே திருமாலும் அங்குத் தோன்றி. முன்னர் தாருகாவனத்தில் கண்ட ஆநந்ததாண்டவத்தை மறுபடியுந் தரிசிக்க நேர்ந்ததே யென்னும் பெருமகிழ்ச்சியுடன் ஆநந்த தாண்டவத்தைத் தரிசித்துத் தேவேந்திரன் முதலிய ஸகல தேவர்களும் புடைசூழத்தான் இலக்குமியைத் திருமணம் புரிந்தனர்.

குறிப்பு:—இங்ஙனந் திருவேட்டீச்சுரப் புராணங் கூறுகின்றதை யறிக.

1. சுவாமி திருநாமம்—திருவேட்டநாதர், வித்தியேச்சுரர்.
2. அம்மன் திருநாமம்—சண்பகவல்லி.
3. விநாயகர் திருநாமம்—வல்லபைக்கணேசர்.
4. சுப்பிரமணியர் திருநாமம்—ஞானவேலர்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவேட்டீச்சுரச் சிற்றம்பலவன்
# இரட்டைமணிமாலை.

---

## காப்பு.

### நேரிசை வெண்பா.

தேவார் திருவேட்டிச் சிற்றம் பலத்தன்மேன்
மாவா ரிரட்டைமணி மாலைசொலத்—தூவார்
கரியா னனத்தான் கறைமிடற்றன் கந்தன்
கரியா னனத்தான்றாள் காப்பு.

## நூல்.

### நேரிசை வெண்பா.

சிவமார் திருவேட்டிச் சிற்சபேசன் றாளைத்
தவமார் மனத்துத் தரித்தோர்—நவமார்
சுகமனைத்தும் பெற்றுச் சுவர்க்கமதுந் துய்த்துச்
சுகமதுவே யாவர் துறந்து. (1)

### கட்டளைக் கலித்துறை.

துறந்த குறுமுனி யாதி தவத்தினர் தூயகுணஞ்
செறிந்த பதஞ்சலி நற்புலி யாதிய சித்தர்களுஞ்
சிறந்த வொருநிலை யாகிய வீட்டினிற் சேர்துறையை
யறிந்திடு முத்தரு மேத்துஞ் சபேச னலர்ப்பதமே. (2)

### நேரிசை வெண்பா.

பதஞ்சலிக்குஞ் சத்திற் பழக்கும் நுயரை
யிதஞ்செய்யு ஞான வெழில்சி—றுதவு
மலர்த்தடங்கள் சூழும் வளமாருஞ் சந்தவனத்
தலத்தமருங் கூத்தன் சரண். (3)

### கட்டளைக் கலித்துறை.

சரணஞ் சிவசர ணென்றே தொழுதுநின் றுளிணையுட்
சரணம் புகுத்தி நிறுத்திய வந்தணக் கான்முளையின்
மரணந் தவிர்த்தருள் வான்மதி சூடிய வாளரவா
பரணந் தரித்துத் திருவேட்டி வாழும் பரஞ்சுடரே. (4)

### நேரிசை வெண்பா.

சுடர்நீர் நிலமாகித் தூவெளியாய்க் காலாய்க்
கடன்மா மதியாய்க் கதிராய்ப்—படர்பாநின்
கஞ்சத்தாள் சேர்ந்தேன் கடிதீவாய் மும்மலஞ்சேர்
நெஞ்சத் தடங்கா நிலை. (5)

### கட்டளைக் கலித்துறை.

நெஞ்சத் தடங்கா நிலைபே றருள்செய் நெறியுடையாய்
கஞ்சத் தயனரி காண்பரி தாகிய கண்ணுதலே
வஞ்சத் தசமுகன் வீறழித் தாண்டருள் வானவவெள்
ளஞ்சத் தடஞ்சேர் திருவேட்டி வாழ்கின்ற வாரமுதே. (6)

### நேரிசை வெண்பா.

அமுதக் குடநினமுர்த வாலம் பருகி
யமுதர்க் கருள்புரிந்த வண்ணல்—குமுத
மலர்த்தடங்கள் சூழும் வளர்வேட்டித் தேவே
அலர்த்தாளை நல்கா யமர்ந்து. (7)

## கட்டளைக் கலித்துறை.

அமர்ந்த மனத்தனத் தவத்தினர் துன்ப மழிக்குநற்சி
ரமர்ந்த வெழுத்தான் னடியார்க் கருட்டிரு வேட்டிநக
ரமர்ந்த வரசிவ சங்கர நின்சீ ரடிமலர்க்கீ
ழமர்ந்து கிடக்கும் வரமரு ளென்ற னகமறவே. (8)

## நேரிசை வெண்பா.

அறமே வடிவா யமர்ந்த பொருளே
பிறைசேர் சடையுடைய பித்தா—பிறவா
நிலையதனைத் தந்தருளாய் நெஞ்சகத்தி லுற்ற
மலவதனை நீக்கி மகிழ்ந்து. (9)

## கட்டளைக் கலித்துறை.

நீக்குதி நெஞ்சி னிறைந்த வவித்தையை நின்னடிக்கா
ளாக்குதி யென்னைத் திருவேட்டி யந்தலத் தார்சிவமே
தேக்குதி மெய்யுணர் வைபந்திரிபறச் செம்பொருளிற்
சேர்க்குதி சச்சிதா நந்தஞ் சிறக்கத் திளைத்திடவே. (10)

## நேரிசை வெண்பா.

திளைத்தேன் பவக்கடற் சிந்தைமிக நொந்து
களைத்தேன் விரியுமனக் கட்டான்—முளைத்த
திரிபுரத்தைச் சுட்ட திருவேட்டித் தேவே
பரிபுரணம் நானுகப் பார். (11)

## கட்டளைக் கலித்துறை.

நானற்ற நீயே யதுவென் றுரைத்தொரு நாயருக்கு
வானுற்ற தேவருந் தேடற் கரியதோர் வாழ்வளித்தாய்
தேனுற்ற சோலைத் திருவேட்டி யூருறைநீ செஞ்சடையாய்
ஊனுற்ற வாழ்க்கை யொழித்தெனக் குன்னருளூட்டுவையே

### நேரிசை வெண்பா.

அருளார் மழைத்தடங்கண் ணம்பிகைசேர் பாகா
தெருளார் மனத்துறையுஞ் சித்துப்—பொருளே
யறிவே பொருளென் றறியுஞ் சிறந்த
வறிவை யெனக்கின் றருள். (13)

### கட்டளைக் கலித்துறை.

அருளே திருவுரு வாயொளி ரீச னரன்சடையோ
னிருள்சேர் மிடற்றன் மதிநதி சூடிய வெம்மிறைவன்
தெருள்சேர் மனத்த ருறைதிரு வேட்டிச் சிவன்பதமே
மருள்சேர் மனப்பிணி யோட்டும் வலிய மருந்துநெஞ்சே.

### நேரிசை வெண்பா.

நெஞ்சக் கருங்கல் நெகிழவிழி நீர்சொரிய
வஞ்சக் கரத்தை யருள்செய்வாய்—கஞ்சத்
துறைமா மகளேத்து மொன்றே விடங்கொ
ளிறையவனே யாண்டருளா யின்று. (15)

### கட்டளைக் கலித்துறை.

ஆண்டவ னேசச்சி தாநந்த னேயள வாதியற்று
நீண்டவ னேநிரு பாதிக நித்திய நின்மலனே
மாண்டவ ரார்திரு வேட்டியி னுயக மாமறை மேற்
றாண்டவஞ் செய்யுஞ் சரணா விந்தந் தருகவெற்கே. (16)

### நேரிசை வெண்பா.

எனக்கேத [illegible] வாராம லெந்நாளுங் காத்து
மனக்[illegible]தாதை மாற்று மருந்தாந்—தனக்குவமை
யில்லாத் திருவேட்டி யீசன் மறைமுடியின்
சொல்லாரும் பாதத் துணை. (17)

## கட்டளைக் கலித்துறை.

துணையா வதிமென் னருநிதி பாவதுந் தொல்லைவினைப்
பிணையா னதைம் பாழித் தின்பருள் செய்வதும்பெய்வளை யார்
கணையாம் விழிக்குங் கலங்காமற் செய்வதுங் காசிநகர்க்
கிணையா ரெழிற்றிரு வேட்டியி னீசனின் னின்னருளே. (18)

## நேரிசை வெண்பா.

அருளே தனிச்சுடரே யானந்த மோனப்
பொருளே யகங்காரந்தான் போமோ—மருளேது
மில்லா மலரா னிறைஞ்சு மறைமுடிவே
சொல்லாய் வருமோ சுகம். (19)

## கட்டளைக் கலித்துறை.

சுகவடி வேசிற் சுகாலய னேயென் றுகளறுத்த
குகவடி வேலைக் குருவெனக் கொண்டு குளிர்மலரோ
னகமதை நீக்கித் திருவேட்டி யின்கண மர் சிவவென்
னகமுக நின்றறி வானந்தமூட்டி யருள் சிவமே. (20)

## திருவேட்டீச்சுரச் சிற்றம்பலவன் இரட்டைமணிமாலை

முற்றிற்று.

வாழ்த்து.

" உலகமும் பல்லுயிரு மொன்றி நிறைந்தோங்கி
யிலகு சிவன் றாள்வாழ் கவே. "

C. Annamalai Mudali
22-9-23.

உ

இந்நூலாசிரியர்
பிரம்மஸ்ரீ ந. சுப்பிரமணிய அய்யரவர்களால்
இயற்றப்பட்ட நூல்கள்.

(1) மத்தியம வ்யாயோகம்

அல்லது

ஹிடிம்பியின் தந்திரம்.

(ஓர் நாடகம்) வடமொழியின் மொழி பெயர்ப்பு.

(விலை அணா ஆறு.)

(2) மநீஷா பஞ்சகம்

ஸ்ரீ சங்கரபகவத் பாதாசாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய (வேதாந்த சாஸ்திரம்) வடமொழியின் மொழி பெயர்ப்பு

மூலச் செய்யுளும் விருத்தியுரையும்,

(விலை அணா ஐந்து.)

அச்சிலுள்ளன

(3) ஞானப்பிரகாசம் (ஓர் நாடகம்.)

நாடக லக்ஷணங்கள் யாவும் அமையப்பெற்ற ஓர் செந்தமிழ் நாடகம். இது இல்லற தருமத்தை சாஸ்திரப் பிரமாணயுக்திகளால் மேன்மைப் படுத்துவது. வேதாந்த சாஸ்திரத்தின் உட்கருத்துகள் பதிக்கப்பெற்றது. கூடிய சீக்கிரத்தில் வெளிவரும்.

(விலை ரூபாய் ஒன்று.)

(4) ஸ்ரீராம விக்ரமம்

அல்லது

பரசுராம—பராபவம்.

ஓர் சுதந்தர நாடகம் - இதில் பல வடமொழி நாடகங்களிலிருந்து இக்கதைக்கு வேண்டிய பல அம்சங்கள் திரட்டி எழுதப் பட்டிருக்கின்றன. இதுவும் கூடிய சீக்கிரத்தில் வெளிவரும்.

(விலை அணா நான்கு.)

PRINTED AT THE NOBLE PRESS. MADRAS, S. E.